# போர்வாள்

"போர்வாள்"

சந்தா விபரம்

ஓராண்டு ரூ. 6 8 0
6 மாதம் ரூ 3 4 0

"போர் வாள்" - நிலையம்
பவழக்காரந் தெரு,
சென்னை 1.

ஆசிரியர்கள்: காஞ்சி. மணிமொழியார்
இரா. இளஞ்செழியன், B.A. (Hons.).

திராவி[illegible]ர்
வார வெளியீடு

தனி இதழ் அணா 2
வெளி நாடு அணா 2½

வாள் 4 | சென்னை, திருவள்ளுவர் ஆண்டு 1982 மாசி 5
17—2—51 சனிக்கிழமை | வீச்சு 24

## ஆசையும் நேசமும்—அங்கு !

★  ★



## அருவருப்பும் சிடுசிடுப்பும்—இங்கு !

சிறு கதை

# ஏழைக்கு ஏது இன்பம்?

[ குணாளன்—குடியேற்றம் ]

“ஏண்டா, தடியா! மாசம் பொறந்தா, வெள்ளிக்காசுகளே எண்ணி வாங்கிண்டு போறியே; அதுபோல, வேலை செய்ய என்ன கேடு நோக்கு?”

“எசமா......ரெண்டு நாளா எனக்கு சுரங்க! வயித்துக்கு வேறே சரியா ‘கஞ்சி’யில்லே! உடம்பெல்லாம் ஒரே வலி!

“மூக்கு வலிக்கலையா! உன்னே போல, ரெண்டு வேலைக்காரனுக இருந்தா, நான், உருப்பட்டா போலத்தான்!

“எசமா......

“மூடுடா வாயே, நாயே! உன் உடம்பு எப்படியிருந்தா, நேக்கென்னடா, நாசமா, போறவனே! போடா வேலைக்கி!”

“என்னாலே ஒரு வேலையும் செய்ய ‘சக்தி’யில்லே எசமா...

“மூக்க பிடிச்சிண்டு சாப்பிட மட்டும், சக்தியிருக்கா? சர்தான்! இந்த மாசத்தோட கிழிக்க வேண்டியதுதான் நோக்கு சீட்டு! போடா, என் முகத்திலே முழிக்காதே, சோம்பேரிப் பயலே!

“நோவிச்சுக்காதியுங்க எசமா.......வந்து........

“என்ன ‘கேடு’ நோக்கு?

“ம்......ஒரு ஐஞ்சு ரூவா வேணுங்க, மருந்து சாப்பிட!

“மருந்தென்ன? ‘மண்ணாங்கட்டி’யே வேணுமானாலும் சாப்பிடு! என்கிட்ட ‘தம்பிடி’ பொறக்காது நோக்கு!

“சாமி, எப்படியாவது தயவு செய்யுங்க! பணம் கொடுத்தாத்தான், வைத்தியர் ‘மருந்து’ கொடுப்பாருங்க!

“இங்கேக் கூட உழைச்சாதான் பணங் கொடுப்பாங்க.

‘மருந்து சாப்பிட்டு, உடம்பு குணமானதும், கடனே தீர்த்திட்றேன். தயவு செய்யுங்க.

அந்த ஏழை மிகவும் பரிதாபமாக—கண்ணீர்த் துளிகளுடன் -அய்யரைக் குழைவாகக் கெஞ்சிக் கேட்டான்—கூப்பிய கரங்களுடன்.

ஆனால், அய்யர், ‘வேலை செஞ்சி-மாசம் பொறந்தா-சம்பளம் வாங்கி அப்புரம் ‘உடம்பே’ பாத்துக்க!’ என்று சீறினார், அந்த ஏழையின் மீது!

‘அதுவரையிலே என் உயிரே போய்விடும் போலிருக்கிறதே.!” இது அந்த ஏழையின் ‘அபய’க் கூக்குரல்!

“போகட்டுமே! உயிர் என்ன ‘வெல்லமா’? நீ ‘செத்தா’ உன் கவலே ஒழியப்போவுது!”

இது அய்யரின் அலட்சியம் கலந்த திமிரான பதில்!

“சாமி! கொஞ்ச ‘இரக்கம்’ வையுங்க இந்த ஏழைமேலே!” அந்தப் பாட்டாளி கதறினான்.

“கொஞ்சமென்ன, நிறையவே வைக்கச் சொல்றேன்!” என்று சீறிய அய்யர், பக்கத்தில் நின்றுகொண்டிருந்த தொழிலாளியைப் பார்த்து, ‘டேய் சுப்பா! இந்தத் தடிமாட்டே ‘ரெண்டு’ கொடுத்து வெளியே தள்ளு!’ என்ற ‘அடக்கு’முறைக் கட்டளையைப் பிறப்பித்தார்.

சுப்பன் அய்யரின் ‘கட்டளை’யை நிறைவேற்ற முடியாத நிலைமையில், செயலற்று நின்று கொண்டிருந்தான்.

அதைக் கண்ட அய்யருக்கு மகத்தான ‘கோபம்’ கொதித்தெழுந்தது.

“ஓஹோ! நோக்கும் ‘திமிறு’ முத்திப் போச்சா? நோக்கும் வேலையிலிருந்து கிழிக்கணும் சீட்டு! நாயே! நீ என்னடா அவனே உதைக்கிறது? இதோ, நானே......’

அய்யர் ஆரம்பித்தார் தன் ‘தடியடி’ தர்பாரை; சற்று முன் ஐந்து ரூபாய் கேட்டுக் கெஞ்சிய அந்தத்தொழிலாளித்தோழனைக் கைகள் ஓயும் வரையில் ‘தடி’யால் தாக்கினார், கண்டபடி திட்டினார், வெளியில் பிடித்துத் தள்ளினார்!

அய்யரின் ‘தடியடி’ தர்பாரை, அங்குக் கூடியிருந்த மற்ற தொழிலாளித் தோழர்கள் தடுக்கவில்லை. ஆனால், அய்யரின் இரக்கமற்ற ‘அரக்க’ மனத்தைக் கண்டு உள்ளம் குமுறினர்!

அவர்கள் இருக்கும் நிலைமையில் அய்யரை எதிர்த்தால், இப்பொழுது அவர்கட்குக் கிடைக்கும், கால் வயிறு ‘கஞ்சி’க்குக் கூட வழி பிறக்காமல் போய்விடும்! எனவேதான், அய்யரை எதிர்க்கும் ‘வலிமை’ அந்த ஏழைகட்கு ஏற்படவில்லை

“ஏண்டா நாய்களே! ஏன் ‘மரமாட்டமா’ நின்னிண்டு இருக்கேள்? போய்த் தொலைகளேன், அவா அவா வேலைகளுக்கு!”



அய்யரின் ‘கர்ஜனை’ அந்தத் தொழிலாளர்களை அங்கிருந்து கிளப்பிற்று!

* * *

இப்பொழுது அய்யரின் வீட்டின் முகப்பில் அமைதி குடிகொண்டிருந்தது. அய்யரும் ஏதோ சிந்தனையிலிருந்தார்.

“கும்பிடுறேன், சாமி!”

அய்யர் திடுக்கிட்டுத் திரும்பினார்! அடுத்த நிமிடம் அய்யரின் முகத்தில் ‘அசடு’ வழிந்தது!

“அட நீ, நம்ம மாரிசாமியின் மகளில்லே?”

அய்யர் ‘அசடு வழிய’வெடுக்கென்று கேட்டார்.

“ஆமாங்க, சாமி!”

அந்தப் ‘பொற்சிலை’ பேசினாள்.

“மறந்துட்டேன்! உன் பெயர் என்ன, குட்டி?’

அய்யர் ஆவலுடன் கேட்டார்.

‘வள்ளிங்க!’ என்றாள் நாணத்துடன் அந்த எழிலரசி!

“ஆஹா! என் தங்கக் கட்டி! என்ன அழகான பெயர்; என்ன அழகான பெயர்! எங்கேக் ‘குட்டி’ உங்க அப்பன் இன்னிக்கு வேலைக்கு வரலை?”

“அவருக்கு ராத்திரிலேயிருந்து சுரங்க! அதனாலேதான்......”

“அப்படியா! ‘அவனுக்கு’ வயசாச்சோன்னோ, அதனாலேதான் அந்தக் ‘கிழவனுக்கு’ அடிக்கடி ஜுரம்—காயலாவர்றது!”

அய்யர் தன் ‘கிழ’ வயதையும் மறந்து பேசினார்.

“உங்கக்கிட்டே..........”

“ஏன் இழுக்குறே! குறும்புக்காரியா இருக்கே—இப்படிப் பயப்படலாமோ? என்ன விசேஷம்?”

“வந்து......எங்கப்பன் உங்கக்கிட்டே, ரெண்டு ரூவா, கடனா வாங்கிக்கினு வரச் சொல்லி என்னே அனுப்பினாருங்க”

“இதுக்காகவா நாணி—கோணி—பூமியே பார்த்து—ஆகாயத்துப் பாத்து கேக்கறே! நீ ‘அழகான’ பொண்ணு, இப்படி ‘அசடாட்டமா’ இருக்கலாமோ? ‘சமத்தா’ இருக்க வேண்டாமோ. என்ன கேட்டே? ரெண்டு ரூபாவா? ஏதும் ரூபா இருக்கிறதா தெரியலே! இரு ‘உனக்காக’ போய் பாக்குறேன்.”

வீட்டினுள் நுழைந்த அய்யர் இரண்டு ரூபாயைக் ‘காலணா’க்களாகவே எண்ணிக் கொண்டு வந்து, அந்தக் கட்டழகியின் மலர்க்கரங்களைத் ‘தொட்டு’க் கொடுத்தார். அதோடு நின்றாரா?

“இன்னும் ஏதாவது கால் அரைகால் வேணுன்னா வா!ம்.... மறந்துட்டேன்! அப்படியே வரச்சே, நல்லா, “குளிச்சுட்டு” வா! என்ன?”

“குளிச்சிட்டு வர்றதா?”

களங்கமற்ற அக் கட்டழகி அய்யரின் ‘புதிரை’ப் புரிந்து கொள்ள முடியாமல் கேட்டாள்.

“சுத்தம் ‘சுகம்’ தரும்னு. சொல்லியிருக்கா, பெரியவா! அதனாலே, எப்பவும் ‘சுத்தமா’ இருக்கணும்னு சொன்னேன்.”

அய்யரின் வியாக்யானம் அவளுக்குப் புரியவில்லை. நான் வாறேன், சாமி என்ற குரலுடன் அங்கிருந்து ஓடி மறைந்தாள், அந்தக் கட்டழகி!

வள்ளி தன் கண்களிலிருந்து மறையும் வரையில், அய்யர் வாயிற்படியில் நின்றபடியே—அந்த சிங்காரியின்பின்னழகைக் கண்டு ‘ரஸித்து’க் கொண்டிருந்தார்.

* * *

கள்ளியூர் கிராமத்திலேயே குப்பையர்தான் ‘தலை சிறந்த’ பணக்காரர்! அய்யரின் பண்ணையில் பல தொழிலாளிகள் வேலை செய்து வந்தனர். அந்தத் தொழிலாளர்களின் பட்டியலிலே—ஆரம்பத்தில் ஐந்து ரூபாய் கடன் கேட்டு—‘மண்டை’ நொறுக்கப்பட்ட சுந்தரமும் ஒருவன்.

எல்லோரும் எச்சிற் கைகளால், காக்கை ஓட்டமாட்டார்கள் என்றால், நமது மேன்மை தங்கிய குப்பையர், தன் ‘கால்களால்’ கூட ஓட்டமாட்டார். ஆசாமி பெரிய எத்தன்! குப்பைய்யருக்கு வயது சுமார் நாற்பத்தி எட்டுதான் ஆகியிருந்தது. இதற்குள் அய்யருக்கு ‘நான்கு’ கலியாணங்கள் வெற்றிகரமாய் நடந்தேறி விட்டன. அய்யருக்கு நடந்ததென்னவோ நான்கு கலியாணங்கள்! ஆனால் மனைவி ஒன்றுதான்.

* * *

அய்யர் உழைப்பாளிகளின் உதிரத்தை ‘உறிஞ்சு’வதில் மகாசமர்த்தர். அவரின் கண்டிப்பான பேச்சு ‘நெருப்பு’ போலிருக்கும். யாருக்கும் கூலிக்கு மேல் ஒரு ‘சல்லி’ தரமாட்டார். அப்படி தப்பித்தவறி கொடுத்துவிட்டால், அன்றிரவெல்லாம் அவருக்குத் ‘தூக்கம்’ வராது. ஏன், சரியாய்க்கூட ‘சாப்பிட’ மாட்டார் அந்த விசனத்தால்! அய்யர் மட்டுமென்ன விதிவிலக்கு?

இன்று எத்தனையோ ‘பெரிய’ மனிதர்கள், உழைப்பாளிகளின் உதிரத்தை உறிஞ்சிக் ‘கொழுத்து’தான்வருகின்றனர்உல்லாசபுரியில் உலவிக்கொண்டுதானிருக்கின்றனர்; ஆனந்த உலகில் சஞ்சரித்துக் கொண்டுதானிருக்கின்றனர்; இத்தகைய ‘கயவர்களை’யும் சமூகம் ‘புண்ணியவான்கள் என்று வாழ்த்திக் கொண்டுதானிருக்கிறது; உலகம் அவர்களை உயர்த்திக் காட்டிப்

(14-ம் பக்கம் பார்க்க)

# போர்வாள்

[ திராவிடர் வார வெளியீடு ]

| வாள் 4 | திருவள்ளுவர் ஆண்டு 1981 மாசி 5 17—2—51 சனிக்கிழமை | வீச்சு 24 |
|---|---|---|


## அபாயசங்கு ஊதுகிறார் அமைச்சர் விக்டோரியா!

"அண்மையில் நடைபெற்ற அறுவடையின்போது சேகரிக்கப்பட்ட உணவுப்பொருள் இப்போது நம்மிடம் இருக்கிறது. இருந்துங்கூட சென்னை மாகாணத்தின் உணவு நிலை இப்போதே நெருக்கடியான தாகத்தான் இருக்கிறது. இரண்டொரு மாதங்களுக்குப் பிறகு, இந்த அறுவடை உணவுப் பொருள் முற்றிலும் தீர்ந்துவிடும். அந் நிலையில் உணவு நெருக்கடி மிகவும் அதிகமாகத்தான் இருக்கும்."

• கனம் ரோச் விக்டோரியா —சென்னை மாகாண உணவு அமைச்சர்—இந்த வாசகத்தை வீசியிருக்கிறார்.

எங்கோ மூலைமுடுக்கிலோ சந்து பொந்திலோ அல்ல, சென்னை சட்டசபையிலே, பொறுப்பும் கண்ணியமும் மிகுந்த இடத்திலே, நாட்டை ஆளும் நாயகர்கள் வீற்றிருக்கும் மண்டபத்திலே தெரிவித்திருக்கிறார் இத் தகவலை.

தகவலைத் தந்திருப்பவர் கண்ணியமானவர். பொறுப்பு மிக்கவர். வார்த்தைகளை வீணை அள்ளி இறைக்கும் விபரீத இயற்கை படைத்தவரல்ல—சொற்களை எண்ணி எடுத்து எடைபோட்டுப் பார்த்துத் தரும் சுபாவம் படைத்தவர்.

பேசியிருப்பவரும் பொறுப்புள்ளவர். பேசப்பட்ட இடமும் பொறுப்புமிக்கது. எனவே இந்த வாசகங்களை ஏனோதானோ என்ற முறையில் எவரும் அலட்சியப் படுத்திவிட முடியாது.

சென்னை மாகாணத்து உணவு நிலைமை ஊராளவந்தவர்களின் உள்ளத்தை மருட்டத் தொடங்கி விட்டது—பதைபதைக்கத் தொடங்கி விட்டனர் அப் பாரத புத்திரர்கள்—பயந்து நடுங்கி நெஞ்சம் குமுறத் தொடங்கிவிட்டனர் தேசபக்த குமாரத்தினர்—என வேதான் அமைச்சர் விக்டோரியாவின் வார்த்தைகளிலே அபாயத் தொனி தெளிவாகத் தெரிகிறது.

அமைச்சர் விக்டோரியா எதையுமே மிகைப் படுத்திக் கூறும் இயல்பு துளியும் இல்லாதவர். இருக்கும் நிலைமையைச் சற்று குறைவாக வேண்டுமானுலும் மதிப்பிட்டுக் காட்டுவாரே தவிர, இருக்கும் நிலைமையை ஒன்றுக்குப் பத்தாகப்பெருக்கி, இல்லாததையும் பொல்லாததையும் பேசி, வீண் சஞ்சலத்தையும் பொருளற்ற அச்சத்தையும் நாட்டிலே மூட்டிவிடுகிற நாச எண்ணம் கொஞ்சமும் அற்றவர் அன்பர் விக்டோரியா.

நெருக்கடியின் அளவை எப்போதும் குறைத்தே மதிப்பிடும் தன்மை படைத்த திருவாளர் விக்டோரியாவே, இப்போது, நெருக்கடி, மிக அதிகமான அளவுக்கு ஓங்கி வளர்ந்துவிட்டது என்று பேசத் தொடங்கிவிட்டார் என்றால், நெருக்கடி, உண்மையிலேயே, எவ்வளவு அதிகமாக இருக்கும் என்பதை நாம் கூறத் தேவையில்லை.

அபாய சங்கு ஊதிவிட்டார் அமைச்சர் விக்டோரியா

இனி என்ன செய்வது நாம் —நாம் என்றால் பொதுமக்கள்?

இப்படிப்பட்ட விசித்திர சித்தர்களை நாட்டாட்சிப் பீடத்திற்கு அனுப்பி வைத்தோமே அந்த நம் முட்டாள்தனத்தை எண்ணி மனம் பதைக்கவேண்டும்—வேறென்ன செய்வது?

## வாசகர்கட்கு!

நெசவாளர் உலகில் மூண்டுள்ள கொந்தளிப்பைக் குறித்து சென்னை சட்டசபையில் இதுபோது காரசாரமான விவாதம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

விவாதம் முடிந்ததும், கைத்தொழில் துறை அமைச்சர் அவர்கள் நெசவாளர் பிரச்சினை குறித்து விளக்கம் தர இருக்கிறார்.

விவாதம் முற்றுப்பெறுமல் இருக்கிற இந்த நிலையில் நெசவாளர் பிரச்சினைகுறித்த நம் கருத்துரைகளைத் தெரிவிப்பதைவிட, சட்டசபை உறுப்பினர்களின் சொற்பொழிவுகளும் அமைச்சரின் விளக்கவுரையும் முடிந்தபிறகு தெரிவிப்பதே, பொருத்தமான செயல்.

எனவேதான், சென்ற இதழில் அறிவித்தவண்ணம், இந்த வார இதழை நெசவாளர் பிரச்சினை விளக்க இதழாகக் கொண்டுவர முடியவில்லை.

அடுத்த வார இதழ், முற்றிலும், கைத்தறி உலகின் குமுறலையும் கொந்தளிப்பையும், நெசவாளர் பிரச்சினையில் ஆளவந்தார்கள் காட்டும் அலட்சியத்தையும் ஆகா வழிப் போக்கையும் அலசி விளக்கும் கட்டுரைகள் நிறைந்ததாக விளங்கும்.



தொடர் நாடகம்.

# திலோத்தமா

(கு. தனபாலன்.)

அங்கம்: 22

இடம்: ராஜகுரு அரண்மனை

[ராஜகுரு ஆலவாயரும் — கருநாகனும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்]

ஆல: என்ன செய்வது? மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கியது போலாயிற்று நான் உன்னை நம்பியது! நீ என்னுடைய திட்டத்தை இப்படிப் படுதோல்வியாக்குவாய் என்று தெரிந்திருந்தால் நானே இக் காரியத்தை சாக்ரதையாக முடித்திருப்பேன்.

[திலோத்தமா ஒளிந்து கேட்கிறாள்.]

கரு: ஸ்வாமி, மன்னிக்கவேண்டும். நான் எவ்வளவோ முன் சாக்ரதையுடனிருந்தும் அவன் எப்படியோ தப்பித்துவிட்டான். இருக்கட்டும், என்றைக்கிருந்தாலும் ஒருநாள் இந்தக் கருநாகனிடம் சிக்கித்தான் தீரவேண்டும். இந்த முல்லை நாட்டில் ஒரு அங்குலம்கூட விடாமல் நான் சல்லித்துவிடுகின்றேன். ஸ்வாமி அந்தக் கிழவன் தொலையட்டும். முதலில் அந்த அறுணைப் பயல் அருணன்தான் தொலையவேண்டும். பின்பு இந்தக் காரியங்களுக்கும் மற்ற அரசியல் காரியங்கள் எல்லாவற்றிற்கும் தடைகல்லாய் இருக்கும் இந்த மந்திரி மணிவேலர் தொலையவேண்டும். பின்பு......

ஆல: இளவரசி காஞ்சனை... அதன்பின்பு......?

[கற்பனைக் கோட்டை கட்டுதல்]

கருநாகா...கொஞ்சம் சிந்தித்துப் பார். நான் அரசன். அஞ்சனை என் பட்ட மகிஷி ...நீ மந்திரி...என் குமாரி திலோத்தமா இளவரசி!

கரு: ஆஹா...ஹா......அருமை ...அருமை......ஆனால் இந்தக் கோட்டையை எப்படி ஸ்வாமி கட்டி முடிப்பது?

ஆல: முட்டாளே ... மனமுண்டானால் மார்க்கமுண்டு. நான் நினைத்தால் எனது யோக பலத்தால் எப்போதோ இவைகளை நிறைவேற்றியிருப்பேன். பூதகணங்கள் என் உத்திரவை நிறைவேற்ற எப்போதும் காத்துக்கொண்டிருக்கின்றன. என் உதடசைந்தால் போதும், மறு கணமே நான் விரும்பிய யாவும் சித்தமாய் இருக்கும், நான் எனது தெய்வீகத்தால் இவைகளைச் சாதித்துக் கொண்டால் பாவம்......உனக்கு ஒன்றும் இல்லாது போகுமே என்று எண்ணித்தான் ஆதிமுதல் உனக்கு வேலை கொடுத்துவருகின்றேன்.

கரு: தங்கள் சித்தம் என்பாக்கியம். அது சரி ஸ்வாமி இதற்கு என்ன யோசனை?

ஆல: என்ன யோசனை... முகில் வண்ணனுக்கு என்னமுறையைக் கையாண்டோமோ அதே முறையைத்தான் நாம் கையாள வேண்டும்.

கரு: அது சாத்திய மாகுமா ஸ்வாமி?

ஆல: [கேலிச் சிரிப்பு] இந்த ஆலவாயனிடமா அந்தக் கேள்வியை எழுப்புகின்றாய்? எண்ணற்கரிய சித்திகள் செய்து வெற்றி பல கண்ட இந்த ஆலவாயனிடமா அவநம்பிக்கைப் படுகின்றாய்? பைத்தியக்காரா......கவனமாய்க் கேள். நாளைக்கு அரண்மனையில் காஞ்சனையின் பிறந்ததின விழா வல்லவா?

கரு: ஆமாம்!

ஆல: அப்போது ஓர் நடன விருந்து அமைப்பது. அதற்கு எல்லோரும் வருவார்கள்.

கரு: அருணன் எப்படி ஸ்வாமி அங்குவருவான்?

ஆல: முட்டாளே.....அருணன் தான் கட்டாயம் வருவான். ஏன் தெரியுமா? காஞ்சனையும், அவனும் ஒருவரையொருவர் அளவுகடந்து காதலிக்கின்றார்கள்.

கரு: [திடுக்கிட்டு] என்ன உண்மையாகவா?

ஆல: ஆம்...பூனை, புலி வம்சத்தில் சம்பந்தம் கொள்ளத் திட்டம் போட்டிருக்கின்றது. ஆகவே அவன் நிச்சயம் வருவான். மேலும், காமென்ன, அருணனை ராஜத்துரோகி—குற்றவாளி என்று பிரகடனப்படுத்தி இருக்கின்றோம் அவன் நானே வராமலிருக்க...? அவனை ஒழிக்க இரகசியமாகத் தானே முயற்சித்து வந்தோம் இதுவரை...!

கரு: ஆம்...ஆம்......சரி, மேற் கொண்டு சொல்லுங்கள்!

ஆல: நடனமாடும் மாது காம் குறிப்பிடும்வேளைகளில் குறிப்பிட்ட ஆட்களுக்கு, அவர்கள் தம்மை மறந்து நாட்டியத்தை ரஸித்துக் கொண்டிருக்கும் சமயம், இந்த சூட்சம மோதிரப் பெட்டியிலுள்ள விஷத்தைப் பானத்தில் கொட்டித் தந்திரமாய்த் தந்துவிடவேண்டும்.

[திலோத்தமா வருதல்]

தி: யாருக்கு.......எந்தையப்பா தருவது?

ஆல: [திடுக்கிட்டு] யாரது...ஓ ...திலோத்தமா! குமாரி! வா...வா ...இப்படி உட்கார்!

[திலோத்தமா அமர்தல்]

தி: என்னப்பா பெரிய திட்டத்தில் மூழ்கி இருக்கின்றீர்கள்போலிருக்கே?

ஆல: ஆம் குழந்தாய்...பொறுத்தது போதும், இனியும் பொறுக்க என்னல் முடியாது. நான் விரும்பிய இலட்சியம் நிறைவேற இப்போதுதான் திட்டம் தீட்டினேன். அதை முடித்துவைக்கும் பொறுப்பு

முக்கியமாய் உன்னைத்தான் சார்ந்தது!

தி: [திடுக்கிடுவதுபோல் பாவனை செய்து] என்ன...என்னைச் சார்ந்ததா...எப்படி?

ஆல: திலோத்தமா, இளவரசி காஞ்சனை பிறந்த தினவிழா நாளைக்கு அரண்மனையில் நடக்கப் போகின்றதல்லவா?

தி: ஆமாம்...அதற்கு?

ஆல: அதற்கு ஓர் நடன விருந்து நீதான் அளிக்கவேண்டும். உன் அபூர்வ நடனக்கலையால் யாவரையும் சொக்கிப்போகும்படி செய்யவேண்டும். பின்பு, [மோதிரத்தைக் காட்டி] இந்த மோதிரப் பெட்டியிலுள்ள விஷத்தைக் கொட்டி அந்தப் பானங்களை இளவரசிக்கும்—மந்திரிக்கும்— அருணனுக்கும் தந்திரமாகத் தந்துவிட வேண்டும்!

தி: ஆ!

ஆல: திடுக்கிடாதே குழந்தாய்! நான் மற்றவைகளைப் பார்த்துக் கொள்ளுகின்றேன்.

தி: எப்படி?

ஆல: எப்படியா? தந்திரமாய் மொழிவேன். அதாவது இன்று மூன்று கொலைகளை மந்திரி தந்திரமாய்ச் செய்ய திட்டம் போட்டிருந்தானென்றும் அதை நான் காளியின் அருளால் அறிந்து அவனுக்கே உன்னைக் கொண்டு நேரும்படி செய்தேனென்றும். அருணன் உண்மையில் ராஜத்துரோகி மட்டுமல்ல மந்திரியுடன் சேர்ந்துகொண்டு அரசனை இரகசியமாகக் கொன்றவனென்றும், அதற்கு ஒத்தாசை செய்தவள் இளவரசி காஞ்சனைவென்றும் உரைப்பேன். எப்படித் தெரியுமா? கண்ணால் காணாத கடவுள்களைத் துணைக்கழைத்து!

[மூவரும் சிரித்தல்.]

தி: அற்புதமான யோசனை! ஆனால் நடக்கவேண்டும்!

ஆல: திலோத்தமா இம்முறை நம் திட்டம் தோல்வியடைய நியாயமே இல்லை. தீயில் விழுந்த புழு எங்காவது தப்புமா? நான் அதற்கான ஏற்பாடுகளை விரைவில் செய்து முடிக்கவேண்டும்.

தி: அது சரி, விஷம் யாரிடமிருந்து வாங்குவது? நம் அரண்மனை வைத்தியரிடமிருந்தா?

ஆல: ஆம்...இதை யாரிடமும் மூச்சுவிடாதே. அரசரைக் கொல்ல முதலில் விஷம் அளித்தவனும் அவன்தான்.

தி: என்ன...!

கரு: ஆம், அம்மா! அரசன் விஷத்தால் மாண்டுபோனான் என்பதை மந்திரி எப்படியோ தெரிந்து கொண்டான் என்றுணர்ந்த வைத்தியனும் உண்மையாய் சொல்லுவதுபோல் யாவற்றையும் சொல்லிவிட்டான். ஆகவேதான் அவன் மீது எவனும் சந்தேகப்படவில்லை.

ஆல: சரி...சரி, நேரமாய்விட்டது. கருநாகா நீ போய் வைத்தியரைக் கண்டு ஆகவேண்டிய காரியங்களை விரைவில் முடித்துவிடு.

கரு: தாங்கள் இதுவிஷயத்தில் கவலையற்றிருக்கலாம்!

[கருநாகன் போகிறான்.]

## அங்கம்: 23

இடம்: மந்திரி மணிவேலர் அறை.

[மந்திரி—அருணன் — திலோத்தமா.]

அரு: தாங்கள் இது விஷயத்தில் இனி கவலையற்றிருக்கலாம்! எல்லாவற்றையும் நானும் திலோத்தமாவும் கவனித்துக் கொள்ளுகின்றோம். என் உடலில் ஒரு சொட்டு இரத்தம் உள்ள வரை என் தாய்நாட்டிற்காகப் போராடத் தயங்கமாட்டேன். இது நான் பிறந்த மண்ணின்மீது ஆணை! என்னுடைய வீர முன்னோர்களின் சவக்குழிகளின் மேல் ஆணை! நான் பூண்டிருக்கும் இந்த வாளின்மேல் ஆணை! மறத்தமிழன் மாண்பின் மீது ஆணை!

மணி: மெச்சினேன் அருண... மெச்சினேன் உன்னை! பிறருடைய நன்மையைத் தன்னுடைய நன்மையென்று எண்ணி எவனொருவன் சுயநலங் கருதாது உழைக்கின்றானோ அவனை மனிதர்களில் மிகச் சிறந்தவன் என்ற கூற்று உன் விஷயத்தில் பொய்யாகி விடவில்லை!

[திலோத்தமா பதட்டமுடன் ஓடிவருதல்]

தி: அருணரே — அமைச்சரே ...வெடி மருந்துச் சாலைக்கு தீ வைக்கத் திட்டமிட்டு விட்டார்கள் தீக்கண்ணர்கள்!

மணி: என்ன நீ சொல்லுகிறாய்?

தி: [கண் கலக்கமுடன்] — ஆ ...நான் அதை எப்படி வாய்விட்டுச் சொல்வேன்...?

அரு: கலங்காமல், உள்ளதை உரை திலோத்தமா!

தி: நாளைக்கு நடக்கப்போகும் காஞ்சனையின் பிறந்ததின விழாவின்போது என்னை நடனத்திற்கு ஏற்பாடு செய்து, முன்பு அரசரைக் கொல்ல எந்த முறையைக் கையாண்டனரோ அதே முறையை அருணருக்கும் தங்களுக்கும் இளவரசிக்கும் கையாளத்திட்டம் தீட்டிவிட்டனர், அக் கல் நெஞ்சர்கள்!

அரு: [கோபமாக] யாரது... உன் தந்தையும், கருநாகனும் தானே?

தி: ஆம்...அதே துரோகிகள் தான்!

[மந்திரி யோசனையுடன் உலவுதல்]

சரி திலோத்தமா, இதற்கெல்லாம் விஷத்தைத் தரும் துரோகி யாரென்று தெரிந்துகொண்டாயா?

தி: நமது அரண்மனை வைத்தியன்தான் இதற்கெல்லாம் காரணம், அரசரைக் கொலைசெய்ய விஷம் தந்தவனும் அவனே!

மணி, அரு: ஆ...துரோகி!

மணி: எங்கேரமும் பட்டை பட்டையாய்த் திருநீறு அணிந்து கொண்டு பக்திமானைப் போல் காட்சியளிக்கும் அந்த கயவனு இதில் கலந்திருக்கின்றான்? சரி, அருண நீ இன்றிரவே இந்த வைத்தியனைப் பிடித்துப்போய் உன் தந்தையார் மறைந்திருக்கும் சுரங்கத்தில் வைத்துவிடு. நாளைக்கு பிறந்த தின விழா கொண்டாட்டத்தின்போது நடனம் ஆரம்பிக்கும் போது அந்த வைத்தியனையும், உனது தந்தையையும் அரண்மனை மண்டபத்திற்கு அழைத்துவந்துவிடு. பின்னால் நடக்கப்போகும் அதிசயங்களைப் பார்!

அரு: அப்படியானால் நான் விடை பெற்றுக் கொள்ளுகின்றேன். நாளை சந்திக்கலாம்.

மணி: சரி. [அருணன் போகிறான்.]

அமைச்சரே, நான் இன்று உங்களுக்கு ஓர் பயங்கர இரகசியத்தை சொல்லப்போகின்றேன். அதை யாரிடமும் வெளியிடவேண்டாம் என்று உங்களை மிகவும் கேட்டுக்கொள்ளுகின்றேன்!

மணி: என்ன சொல்லப் போகின்றாய் திலோத்தமா?



தி: உறுதி தருவதானால் சொல்கிறேன்!

மணி: சரி, உறுதி தந்தேன்.

தி: அமைச்சரே, மகாராணி அஞ்சனாதேவி முதன்முதலில் என் தந்தையின் பகிரங்க பத்தினி... பின்பு கள்ளக் காதலி!

மணி: (திடுக்கிட்டு) என்ன... என்ன...!!

தி: ஆம் அமைச்சரே நான் சொல்வது மூற்றிலும் உண்மை. நான் என் தந்தையின் இரகசியப் பெட்டியை ஓர் நாள் திறந்து அதிலுள்ள ஓலைகளைப் படித்துப் பார்த்ததில் சில முக்கியமானதும், ஆச்சரியமானதுமான விஷயங்களை தெரிந்துகொண்டேன்.

மணி: அவைகளில் என்ன இருந்தது?

தி: தற்போதைய முல்லை நாட்டு மகாராணியும், காஞ்சனையின் சிற்றன்னையுமான அஞ்சனாதேவிதான் எனது தாய்! இவள் பாஞ்சால சக்ரவர்த்தியின் ராஜகுருவான ஜகன்னாதஸ்வாமிகள் என்பவரின் மகள். அந்த ஜகன்னாதஸ்வாமிகள் என் தந்தையாம் ஆலவாயருக்கு பிரதம சிஷ்யன், தமிழ்நாட்டு மன்னர்களில் மிகவும் வலிமை வாய்ந்தவரும் ஆரியத்தை அடியோடு அழிக்க உழைத்தவருமான முகில் வண்ணரின் புகழ் எங்கும் பரவி இருந்தது ஒரு காலத்தில்! எப்படியாவது ஆரியத்தை நிலைநாட்டச் செய்யவேண்டுமென்று என் தந்தை — தாய்— எனது பாட்டன் மூவரும் கூடி சதி செய்தார்கள். நானப்போது குழந்தை. அச் சதியின்படி எனது பாட்டன் ஜகன்னாதஸ்வாமிகள் பாஞ்சால சக்ரவர்த்தியை முல்லை நாட்டின்மேல் படையெடுக்கச் செய்ய வேண்டுமென்றும், ஒருவேளை போரில் பாஞ்சால மன்னன் தோற்றுவிட்டால் நல்லெண்ணத்தை வளர்க்கும் பொருட்டும் இனி என்றென்றும் முல்லை நாட்டுடன் பாஞ்சாலம் உறவுடன் இருக்க எனது தாயை பாஞ்சால மன்னனின் மகள் எனப் பொய் புகன்று முகில் வண்ணருக்கு மணம் செய்து தருவதென்றும் முடிவு செய்யப்பட்டது. அதன்படியே நடந்தது. எனது தாயின் யோசனைப்படியே எனது தந்தையும், அவளது கணவனுமான ஆலவாயர் ராஜகுருவாக இருக்கும்படி அழைக்கப்பட்டார் பாஞ்சாலத்தினின்றும், என் தந்தை ராஜகுருவாக அமர்ந்தும் தான் நினைத்ததை நினைத்தவாறு செய்ய முடியாது போய்விடவே கருநாகன் என்ற விபீஷணனை பதவி ஆசை காட்டி தன் சதியை நிறைவேற்றினர். கருநாகனும் ராஜத்துரோகியானான். இதுதான் நான் சொல்ல விரும்பியது!

மணி: திலோத்தமா, என்னை அளவுமீறிய ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டாயே! என்னால் நம்பவே முடியவில்லையே, திலோத்தமா, நான் உனக்கு வாக்களித்தபடி இதை யாரிடமும் சொலல மாட்டேன். ஆனால் அவ்வீணர்களை இனியும் உலகில் உலவவிடுதல் கூடாது. தேளுக்கு இடம் கொடுத்தால் அது விநாடிக்கு விநாடி கொட்டும் என்பதைப் போல அழிவுக்காரர்கள் என்று அறிந்திருந்தும் அவர்களை விட்டுவைப்பது மகா ஆபத்து! நீதியும் இனி பொறுத்திருக்காது, ஆகவே......

தி: பழிக்குப்பழி வாங்கிவிட வழி வகுக்கவேண்டும் இப்போது. அது மிகச் சுலபமே...!

மணி: எப்படி திலோத்தமா?

தி: பிறந்த தினவிழாவில் நடனம் ஆடப்போவது நான்தான். என் தந்தை குறிப்பிடும் விஷக் குவளைகளை அதாவது விஷம் கலந்த குவளைகளைத் தந்திரமாக ஒதுக்கிவிட்டு நல்லவற்றை உங்களுக்கும், அருணருக்கும், இளவரசிக்கும் தந்துவிடுகின்றேன். நிஜமான விஷக் குவளைகளைத் துரோகிகள் அருந்தும்படி செய்துவிடுகின்றேன்!

மணி: திலோத்தமா நீ சொல்லும் விஷயம் எத்தகையதென்பதை சிந்தித்துப் பார்த்தாயா?

தி: அமைச்சரே, அறிந்துதான் சொல்லுகின்றேன்......அழிவுக்காரர்கள் அழியவேண்டியதுதானே நியாயம்? அவர்கள் யாராய் இருந்தால் என்ன?

மணி: திலோத்தமா நீ உண்மையிலேயே ஓர் அபூர்வப் பிறவிதான். சேற்றில் செந்தாமரை முளைப்பதுபோல அந்த இழிமதியாளனுக்கு நீ பிறந்துவிட்டாய். உன் வீரம்—தியாகம் — அறிவு — ஆற்றல் யாவும் பெண்மையின் உயர்வுக்கு ஓர் எடுத்துக்காட்டு. திலோத்தமா உனக்கு இக் நாடு என்றென்றும் நன்றி செலுத்தக் கட்டுப்பட்டது! அநியாயமாய் அழிந்து போகும் நிலையிலிருந்த அற்புதப் பொருளைக் காப்பாற்ற இடையறாதுழைக்கும் உனக்கு யாவரும் சிரம் வணங்கக்கடமைப்பட்டவர்களாவார்கள்!

தி: அமைச்சரே, அரசரையும் மற்றும் உங்களையும் அருணரையும் கொலை செய்யத் திட்டமிட்ட பாதகர்கள் யார் யார் என்பதைப் பாருக்குணர்த்திவிடுங்கள். ஆனால் என் பிறப்பின் இரகசியத்தையும், என் தாயாரின் இரகசியத்தையும் மட்டும் தயைகூர்ந்து வெளியிட்டுவிடாதீர்கள்,

மணி: [கவலையுடன்] அப்படியே ஆகட்டும் திலோத்தமா!

தி: மிக்க வந்தனம். நேரமாகின்றது. என் தந்தை என்னைத் தேடிக்கொண்டிருப்பார். நான் வருகிறேன்.

(மந்திரியார் தலையசைக்க போகிறாள் திலோத்தமா.)

[தொடரும்]

# பாரைக் குலுக்கிய புரட்சித் தலைவர்

[ தங்கவேலர் ]

"விளாடிமர்! உன் அண்ணுவுக்குத் தூக்கு தண்டனையாமே!...... ஐயோ பாவமே, நிக்கோலஸ் ஜாரைக் கொல்வதற்கு சதி செய்தாராமே!......"

...விளாடிமரின் பள்ளி மாணவன் துக்கம் விசாரித்துவிட்டு இந்த வார்த்தைகளை உதிர்த்துக்கொண்டே சென்ருன் வழியோடு. அழுது கண்ணீர் விட்டுக்கொண்டிருந்த விளாடிமர் சிந்தித்து சிந்தித்து முடிவு தேடிக்கொண்டிருந்தான்.

"சர்வாதிகாரியை நாட்டிலே உலவவிடுவதே கேடு! ஆனல், சர்வாதிகாரி ஜாரைக் கொல்லச் சதி செய்தார் என்ற காரணங்காட்டி என்னருமை அண்ணுவைத் தூக்குக் கயிற்றிலே மாட்டி அழகு பார்த்து விட்டார்களே! இப்படி ஒரு ஆட்சி நாட்டிலே நடந்து கொண்டுதானே இருக்கிறது..." என்று இதுபோல ஏதேதோ பல எண்ணங்கள் மாணவன் விளாடிமரின் உள்ளத்திலே அலைமோதின! அப்போது அவனுக்குப் பதினேழு வயதுதான். சர்வாதிகார ஆட்சித்தொல்லை..., அதன் பயனல் தன் அண்ணு அடைந்த தூக்கு தண்டனை இவை யெல்லாமாகச் சேர்ந்து விளாடிமரை அந்த சின்னஞ் சிறு பள்ளி வயதிலேயே அரசியலில் ஈடுபடுத்தியது.

வளர்ந்து வந்த விளாடிமர் தன் பள்ளி வாழ்வை முடித்து விட்டு கல்லூரியிலே கால் வைத்ததுதான் தாமதம்...அவனுள்ளத்திலே சின்னஞ் சிறுவயதிலே விதைக்கப்பட்ட அரசியல் விதை உயர ஓங்கி வளர்ந்து விட்டிருந்தது!

தன் உள்ளத்தை யொத்த கருத்தோடுதான் மாணவர்கள் அங்கே கல்லூரியிலே உலவிக்கொண்டிருப்பதை விளாடிமர் புரிந்து கொள்ள வெகு நாள் செல்லவில்லை. அங்கு மிங்குமாகச் சிதறிக்கிடந்த மாணவ சக்திகளை யெல்லாம் ஒன்று திரட்டிப் புதியதோர் முகாமினைப்புல்லர் சக்திக்கு முன் நிறுத்திக்காட்ட வேண்டுமென்ற நினைவிலே விளாடிமர் மாணவ உள்ளங்களுக்கெல்லாம் ஒன்றுபட வேண்டிய ஐக்கியத் தன்மையை விளக்கினர்! விளாடிமரின் இந்தச் செய்கை—சர்வாதிகார ஆட்சியின் தயவை எதிர் பார்த்திருந்த கல்லூரி நிர்வாகிகளுக்குத் தெரிந்து விட்டது. வீசும் வெடிகுண்டை விட வலிமை மிக்கது மாணவசக்தி என்பதைப் புரிந்து விட்டிருந்த... கல்லூரி நிர்வாகிகள் மாணவர் ஒன்று பட்டால், அவர்கள் சக்தி வளர்ந்தால் தீது என்க்கொண்டு அடக்கினர் அடக்குமுறை அம்பு கொண்டு!

முதல் முதலாக அந்த அம்பு விளாடிமர் மீது பாய்ந்தது! கல்லூரியிலே மாணவசக்தியை வளர்க்க முயன்ருய் என்ற குற்றச்சாட்டை அவன் மீது சுமத்தி கல்லூரியை விட்டு வெளியே அனுப்பி வைத்தார்கள் அதன் நிர்வாகிகள்.

தன் படிப்பைப் பொறுத்த அளவிலே விளாடிமர் வருந்தவில்லை! கல்லூரிக்குக் கட்டி வரவேண்டிய பணத்தை மிச்சப் படுத்திக்கொண்டு வீட்டிலிருந்தே படித்துச் சட்டப் பரீட்சையில் முதல் மாணவனுகத் தேறினன். விளாடிமர் வீட்டிலேயிருந்து சட்டப் பரீட்சைக்குத் தன்னைத் தகுதியாக்கிக் கொண்டிருந்தபோது, ஓய்ந்த நேரங்களிலே காரல்மார்க்ஸின் ஏடுகளையே மிக கவனமாகப் படித்துவந்தான். அந்த ஏடுகள் பல பல புதிய கதைகளையெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தன விளாடிமருக்கு—தொழிலாளியின் நிலைகளைப்பற்றி. அவரின் ஏடுகள் தொழிலாளர் நடத்தும் போராட்டக் கதைகளை விளக்கி வைத்தன.

சட்டப் பரீட்சையின் முடிவுக்குப் பின் நாட்டைத் தமது சூதுத் திட்டத்தால் ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்த எதேச்சாதிகாரிகளை எதிர்க்கத் திட்டம் தீட்டினன் விளாடிமர்.

விளாடிமர் குரியச் உலியனுவ என்ற தமது நீண்ட பெயரை நீக்கி விட்டு "லெனின்" என்ற எளிய பெயராக மாற்றிக்கொண்டு...... முதல் முதலாகத் தொழிலாளத் தோழர்களோடு தொடர்பேற்படுத்திக் கொண்டார்! இப்படி ஆரம்பமாகியது லெனினுடைய பொது வாழ்க்கை. சேவை என்ற பதத்துக்குப் புது அர்த்தத்தைக் கொண்டு விட்ட ஆதிக்கபுரி, லெனின் உழைப்பின் உருவங்களோடு தொடர்பேற்படுத்திக் கொண்டதைக்காண அச்சங் கொண்டது. அவர்களது அச்சத்தை அகற்ற சட்டப் புத்தகத்திலுள்ள அடக்குமுறை அத்தியாயங்களை விரித்துப் பிடித்துப் படித்தனர்...ஆதிக்கவாதிகளின் அணைப்பிலே சிக்கியிருந்தனர்சட்ட வல்லுநர்கள். அவர்களின் அருந்துணையால் லெனின் அரும்பு விட்டு வளர்க்க எண்ணிய இயக்கத்தை நசுக்க ஆரம்பித்தனர் எதேச்சாதிகாரிகள்!

தொழிலாளர்களின் தூங்கிக்கிடந்த நாட்டு உணர்ச்சியைத் தட்டி விட்டு எழுப்பினர் என்ற காரணத்தைக் காட்டி பதினுலுமாதம் சிறை வாழ்வு அளிக்க எண்ணி சிறைச்சாலைக்கு லெனினை அனுப்பிவைத்தார்கள் ருஷிய சர்வாதிகாரிகள். "கேவலம் சிறைச்சாலை வேண்டுமானல் என் உடலை நசுக்கி எடுக்கும்! ஆனல் என் லட்சியம்......... அதை யாராலும் தொடமுடியாது" ...என்பதைலெனின் நாளடைவிலே சிறை அதிகாரிகளுக்கு விளக்கி வைத்தார்.

சிறையினின்றும் அவரை விடுவித்து சைபீரியாவுக்கு நாடு கடத்தி வைத்தனர். தான் நாடு கடத்தப்பட்டபோது லெனின் வருந்தினர்—தனக்காக அல்ல, தன் நாட்டு மக்களிடம் தான் ஏற்படுத்திக் கொண்டிருந்த தொடர்பு அறுந்து போகிறதே என்ற காரணத்தால்! என்றாலும் தான் நாடு கடத்தப்பட்டுச் சென்ற இடத்திலும் அதன் சுற்றுப் பக்கங்களிலும் வசித்திருந்த தொழிலாளர்களோடு இணைந்து வாழ்ந்து அவரின் ஆர்வத்தை யெல்லாம் காட்டினர்.



தான் சைபீரியாத்தீவு வந்தடைந்ததும் அந்தத் தீவிலிருந்தே ருஷியா தேசமிருந்த திக்கை நோக்கிக் கொண்டே, "என்நாட்டுத் தொழிலாளர்கள் இந்நேரம் கொடுங்கோலனல் என்னென்ன தொல்லைகளை ஏற்றிருக்கிருர்களோ!" என்று தனக்கிருந்த ஏக்கத்தை வேதனைக் குரலோடு கூறுவாராம்.

1905-ம் வருடம் எங்கெங்கோ சுற்றி அலைந்து விட்டு ருஷிய மண்ணிலே கால்வைத்தார் லெனின். அவரும் அவரது கூட்டுத் தோழர்களுமாகச் சேர்ந்து புயலெனப் பணியாற்றிப் புரட்சியை உருவகப் படுத்தி லவத்தனர். அவர்கள் தொடுத்த அந்த முதல் போர் தோல்வி யடைந்தது. மூன்று வருட ஓயாத உழைப்பால் ருஷிய எதேச்சாதிகார எதிர்ப்பு சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி உரிமை முழக்கம் வளர்க்கப் பட்டது, ஆனல் அந்தப் போர் முழக்கம் வெற்றி தரவில்லை! 1907-ல் மீண்டும் லெனின் தன் நாட்டை விட்டு வெளியேறினர்!

புரட்சியின் உருவங்கள் ருஷிய நாட்டிலே இரகசியமாக உலவிக்கொண்டிருந்தபோது லெனின் தன் நாட்டுக்கு வெளியே உலவிக்கொண்டே அங்கிருந்து ஆதரவைத் திரட்டிக் கொண்டிருந்தார் நாட்டுப் புரட்சிக்காக! ருஷியாவின் உள்ளும் வெளியும் புரட்சி உருவங்கள் மிகப்பெரிய அளவிலே வளர்ந்து விட்டிருந்த 1917-ம் ஆண்டு பெரியதோர் போர் மக்கள் சக்திக்கும்-மன்னன் சக்திக்கு மிடையே மூண்டு இறுதிவெற்றி நெஞ்சுலரப் பாடுபட்ட பாட்டாளியின் பக்கமே நின்றது!

ஆணவக்குரலுக்கு முடிவு கட்டி அறப்போரிலே வெற்றி கண்டது தொழிலாள வர்க்கம். வெற்றி பெற்றதன்மூலமாக — பாட்டாளியின் நல்ல நிலையிலே நாட்டங் கொண்டு அவருள்ளத்திலே எழும்பிக் குதித்துக் கொண்டிருந்த லெனின் சிந்தனை வெற்றிபெற்றது! ஆம் லெனின் வெற்றிபெற்ருர்!

லெனின் வெற்றிபெற்ருர் என்று இலகுவிலே எழுதிவிடுகிருேம்! ஆனல் அவர் வெற்றி பெறுவதற்காகச்செய்த மகத்தான தியாகத்தை, நல்லாட்சியூர் நோக்கி மக்களை அவர் அழைத்துச்சென்ற புரட்சிப் போக்கை......இரத்தங்கொட்டி எழுதப்பட்ட ருஷிய சரித்திரத்தைப் படித்தவர்களுக்குப் புரியும்......லெனின் எப்படி வாழ்ந்து வெற்றி பெற்ருர் என்பது!

லெனின் தனது பேச்சின் மூலமாகவே மக்கள் இதயத்தைக் கட்டிப் பிடித்திழுத்தார். தன்பக்கமாக அவர் பேசினரென்ருல் கூட்டம் ஆயிரமாயிரமாகத் திரண்டு நிற்பர்—எவ்வளவு நேரம் ஆனலும் சரி—அடக்குமுறை எந்த அளவிலே வந்து தாக்கினலும் சரி, லெனின் பேசி முடிந்தபிறகுதான் மக்கள் மற்ற செய்திகளிலே எண்ணத்தைத் திருப்புவர். கூட்டத்திலே கூடியிருப்போரின் உள்ளங்களிலே எந்தக் கருத்து வட்டமிடுகிறதோ — அதே கருத்தைத்தான் ஆணித்தரமாக, பகிரங்கமாக மேடையிலே ஏறி நின்றுகூறி—இன்ன இன்ன முறையிலே நடந்து கொண்டால் கொள்கை வெற்றி கிடைக்குமென்ற காரணத்தையும் லெனின் தனது பேச்சிலே விளக்கி வைப்பார்.

லெனினுடைய இந்த அதியற்புதப்—பேச்சுத் திறனை அவரோடு பல கஷ்டகஷ்டங்களை ஏற்றுப் புரட்சிப்போரிலே பணியாற்றிய தலைவர் ஸ்டாலின்........."ருஷிய கம்யூனிஸ்டுக் கட்சியின் இருதயத்தைப் பார்க்கப்போகிருேம்! மேதைகளுக் கெல்லாம் பாடம் புகட்டிவரும் ஒரு பெரிய மேதையை பார்க்கப்போகிருேம்! ஆற்றல் நிறைந்த ஒரு ஆஜானுபாகுவைப் பார்க்கப் போகிருேம்! என்ற ஆவல் வழிந்தோடும் உள்ளத்தினனாய் ஒரு பொதுக் கூட்டத்திலே உட்கார்ந்திருந்தேன். நேரம் ஆக ஆக என் மனம் படபடத்துக் கொண்டிருந்தது—எப்போது கூட்டத்தை ஆரம்பிப்பார்களென்ற எண்ணத்திலே! சிறிது நேரத்திலே கூட்டமும் ஆரம்பமாகியது! மேடையிலே பலரின் மத்தியிலே அமர்ந்திருந்த ஒருவர் மேடையின் முன்னே எழுந்து வந்து நின்ருர். புரட்சித் தலைவரின் வருகையைப் பற்றிச் சொல்லப்போகிருர் என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே "தோழர்களே!" என்று கம்பீரக் குரலெடுத்துப் பேச ஆரம்பித்துவிட்டார். எனக்கு அருகிலிருந்தவரைப் பார்த்து "இவர் யார்?", என்று கேட்டேன்! "இவர்தான் புரட்சித் தலைவர் லெனின்" என்று சொன்னர்! பிறகு கேட்கவேண்டுமா என் ஆச்சரியத்துக்கு! என் உடல் முழுவதும் ஒரே அதிர்ச்சி! நான் ஏமாந்தே போனேன். புரட்சித் தலைவர் லெனின் மிகச் சாதாரணமாகவே இருந்தார், சாதாரணமாக ஒரு மனிதன் இருக்கவேண்டிய உயரத்துக்கும் கொஞ்சம் குறைவாகவே இருந்தார்!......ஒரு ஏழைத் தொழிலாளியைப் போல உடையணிந்து பேசிக்கொண்டிருந்த அவர் கொஞ்சங் கொஞ்சமாக அங்கு கூடியிருந்தவர்களின் இதயங்களிலெல்லாம் குடிபுக ஆரம்பித்தார்......!" ...என்று இது போல தலைவர் ஸ்டாலின் புகழ்ந்து கூறுகிருர்!

லெனின் வாழ்ந்த பெரும் பகுதி நாளிலே அவர் கூடவே தங்கியிருந்த எழுத்தாளன், மாக்ஸிம் கார்க்கி! நிக்கோலஸ் ஜாரின் அடக்குமுறை ஈட்டிகள் பல ஆயிரம் தடவை மாக்ஸிம் கார்க்கியின் மீது பாய்ந்திருக்கின்றன. அந்த பிரசித்திபெற்ற ருஷிய எழுத்தாளன் லெனிேைடு கூட்டுத் தோழமை கொண்டு வாழ்ந்த போது லெனின் அடிக்கடி கூறி வந்த பல அரிய பெரிய செய்திகளையெல்லாம் ஏடுகளிலே தீட்டியுள்ளான்.

மாக்ஸிம் கார்க்கியின் "அன்னை" என்ற அழகு சிந்தும் நூல் இன்று தமிழில் கூட மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

அந்த "அன்னை" என்ற நூல் அன்று கார்க்கியால் உருவாக்கப் பட்டுக் கொண்டிருந்த போதுதான் ஜாரின் அடக்கு முறை மிகப்பெரிய அளவிலே அவரைத்தாக்கியது! எங்கே புத்தகமே முற்றுப் பெருதோ என்ற ஏக்கத்திலே லெனினை சந்தித்த சமயத்திலே, தான் அவசர அவசரமாக "அன்னை"யை முடித்துக் கொண்டிருப்பதை கார்க்கி அவரிடம் விளக்கினர். ஏற்கனவே "அன்னை".

கையெழுத்துப் பிரதியைப் படித்திருந்த லெனின் அடக்குமுறை மேலும் விரிவதற்குள் புத்தகம் வெளி வந்துவிட வேண்டுமென்பதைக்கூறித் தொழிலாளர்கள் பலர் ஏன் புரட்சியில் பங்கு கொள்கிறு மென்பதைப் புரியாமலே குழம்பிய நிலையில் நம்மோடு அணி வகுத்து நிற்கின்றனர், இந்த நிலை மாற "அன்னை" உதவும் விரைவிலேயே வெளிவந்தால்—என்ற தனது ஆர்வத்தை, தொழிலாளரின் குழப்ப நிலையை விரட்ட ஏடொன்று வெளிவரப் போகிறதென மகிழ்ந்து—அந்த நேரத்திலேயே தக்க சமயத்தில் ஏடு தீட்டிய கார்க்கியையும் தட்டிக் கொடுக்கிறுர் புகழுரையால்!

அப்படி லெனின் ஒருமுறை தன்னையும் தன் "அன்னை"யையும் பற்றிப்புகழ்ந்த சம்பவமேபோதும்: அந்தப்புகழுரையே எனக்குப்பெரியதோர் விலைமதிக்கமுடியாத பரிசு ......என்று மாக்ஸிம் கார்க்கி ஏடொன்றிலே மகிழ்ச்சியோடு எழுதிக்காட்டுகிறுன்.

இந்த ஒரு சம்பவமே லெனின் கல்ல நிலைக்கு வரப் பாடுபட்டவரை இகழ்ந்து பேசி தன்னை அறிவாளியாகவும் நாட்டுத் தொண்டாற்றுபவனின் மனம் புண்படும் படியாகவும் பேசுபவரல்ல வென்பதைக் காட்டுகிறது. லெனின் தந்த புகழுரை என்ற துணையைவைத்து கார்க்கி எத்தனையோ எழுச்சிதரும் ஏடுகளைத் தீட்டினுன். உழைப்பவரை உதாசினம் செய்து பழக்கப் படுத்திக்கொள்ளாத காரணத்தால் லெனினிடம் தலைவருக்குரிய ஒரு தகுதி மலர்ந்தது.

1919-ல் ருஷியப் பஞ்சம் வந்தபோது, ராணுவத்தினரும், குடியானவர்களும் லெனினுக்கு ரொட்டியும், வெண்ணெயும் அனுப்பி வைத்தனர். இவைகளையெல்லாம் கண்ட லெனின் கார்க்கியிடம், "என்னை ஏதோ சீமானென எண்ணிக்கொண்டு ஏதேதோ அனுப்புகிறுர்கள்! அவர்களை வேண்டாமென்று கேட்டுக்கொண்டாலோ வருந்துகிறுர்கள்" எனக்கூறி நோயோடு போராடும் 'தோழர்களுக்கு ரொட்டி, முட்டைகளைக் கொடுத்துவிடுவாராம். காடு பஞ்சத் தால்வாடியபோதுதலைவனுக்காகச் சில பல உணவு வகைகளை மக்கள் சேகரித்து அனுப்பினர். ஆனல் தலைவனே மக்கள் பசிக்கு அழைப்புக் கொடுத்துக்கொண்டுவாட, தான் மட்டும் உல்லாச உணவருந்துவதா என எண்ணுகிறுன். எல்லோர் இதயத்தையும் தனது இதயமாக்கிக் கொண்ட தலைவனெருவன் மட்டுமே செய்யக்கூடிய காரியமது!

லெனினுக்கு இருப்பது கலை ஆர்வமில்லாத உள்ளமல்ல! கலைஞர்களை வரம்புக்கு உட்பட்ட தன்மையிலே போற்றுவதையே அவர் விரும்பினர்! ஒரு சமயம் லெனின், ஜிஸ்ரோயேவ் என்ற தோழரோடு ரயில் பயணம் செய்துகொண்டிருந்த போது "டூரர்" என்ற ஜெர்மனிய சைத்ரீகனைப் பற்றிய புத்தகமொன்றை வாசித்துக்கொண்டிருந்தார். அதே பெட்டியில் லெனினேடு அமர்ந்திருந்த சில ஜெர்மானியர் அந்தப் புத்தகம் யாரைப்பற்றியதென்று கேட்டார்கள். அந்தப் பெரிய "டூரர்" என்ற சித்திரக் கலைஞரைப்பற்றி அந்த ஜெர்மானியர்கள்கேள்விப்பட்டதில்லை என்று தெரிந்தது. இந்த அவர்களின் போக்கு லெனினுக்கு விசித்திரமாகத் தோன்றவே அவர் ஒருமுறை அல்ல, இருமுறை ஜிஸ்ரோயேவிடம் பெருமையுடன், "இவர்களுக்குத் தம் கலைஞரைத் தெரியவில்லை! ஆனல். நமக்குப் புரிகிறது" என்று கூறினர்.

கலைஞர்கள் தன் நாட்டுக்குடைய சில பலருக்குப் புரியாமலே ஒருந்துவிடுகிற அறிமுகமாகாத போக்கை லெனின் உள்ளம் வெறுத்தது.

...இப்படி எந்தத் துறையிலே பார்த்தாலும் ஒரு தலைவனுக்குரிய அம்சத்தோடு தன் வாழ்நாள் முழுதும் உலவி...புரட்சிப் போரிலே வெற்றிகண்ட லெனின் அவரது 54-வது வயதிலே மறைந்தார்!

அவர் மறைந்தார்! ஆமாம் விளாடிமர்—லெனின் மறைந்தார்! ஆனல் ரஷியாவை விட்டு அவர் உடலை எங்கும் போய்விடாதபடி பாதுகாத்து விட்டனர்...அவரின் அரும்பெரும் முயற்சியின் பயனல் புது வாழ்வு பெற்ற ஸோவியத் ருஷிய மக்கள்!

பெட்ரோகிராட் என்ற பெரிய எழில்மிகு நகரத்தின் பெயரை மாற்றி லெனின் கிராட் என்ற பெயர் சூட்டி, அந் நகரின் மத்தியிலே உயரமான மேடை மீது ரசாயன முறையினல் தயார் செய்த ஒரு கண்ணுடிப்பெட்டியில் லெனின் பூத உடலை அவர் அமர்ந்திருப்பதுபோல வைத்துக் காப்பாற்றி வருகின்றனர்.

லெனின்! அவரின் வாழ்வு! இன்றைய ஆதிக்க புரியினருக்கு ஒரு பாடம். நாட்டுப் பற்றுக் கொண்டான் என்ற காரணத்துக்காக லெனினுடைய அருமை அண்ணுவுக்கு தூக்குக்கயிற்றைப்பரிசளித்தனர் ருஷிய சர்வாதிகாரிகள்! ஆனல், பாவம் அவர்கள் எண்ணவில்லை ஆதிக்க மயக்கத்தால்.. ... ஒரு அண்ணுவுக்குத் தூக்குக் கயிற்றைப் பரிசளித்தால் அவன் தம்பி லெனின் தோன்றி புரட்சிப் போரிலே வெற்றி வாங்கித் தருவான் என்பதை.........மறந்து விட்டனர்.

அடக்குமுறை எங்கெங்கு எழும்புகிறதோ அங்கெல்லாம் ஒரு லெனின் தோன்றுவான்! லெனின் அண்ணுவுக்குத் தூக்கு! அவர் தூக்கு மேடையிலே இரத்தம் கொட்டினர்! அவரின் அருமைத் தம்பி அவர்கொட்டிய இரத்தத்தை வீணுக்கவில்லை. அண்ணுவின் கனவைத் தம்பி நனவாக்கினுன்.

---

## பிரளய உலகம்

உலகில் நொடிக்கு நொடி—மணிக்கு மணி நாளுக்கு நாள் எத்தனையோ புதுமை நிகழ்ச்சிகளும்: மாறுதல்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றின் தொகுப்பே இந்நூல். 1929-ம் ஆண்டு முதல் 1947-ம் ஆண்டு வரை உலகின் பல பாகங்களிலும் அரசியல், பொருளாதாரம், சமுதாயம், தொழில் பெருக்கம் இவற்றின் காரணமாக ஏற்பட்ட மோதுதல்களையும், புரட்சிகளையும், பின் விளைவுகளையும் தேதிவாரியாக இந்நூல் எடுத்துக் காட்டுகிறது. எல்லாரும் அறியத் தக்க செய்திகள் நிறைந்தது. சிறப்பாக எழுத்தாளர், பேச்சாளர், பத்திரிகாசிரியர்கட்கு நல்லுதவியாக இருக்கத் தக்கது.

விலை ரூ. 1 0 0

**பகுத்தறிவுப் பாசறை**
பவழக்காரத் தெரு, சென்னை 1.



# வெள்ளை மாளிகையில் ஓர் நாள்!

ஓரங்க நாடகம்

[அகில உலக அரங்கில், அமெரிக்க நாட்டு ஆதிக்க வாதிகள் இதுபோது நிகழ்த்திவரும் விபரீத விளையாட்டுக்களின் விசித்திரத் தன்மையை அடிப்படையாக வைத்துப் பின்னப்பட்டிருக்கும் சுவைமிகு சிறு நாடகம் இது. ஆதிக்க வாதிகளின் உள்ளத்தில் நச்சுக் கருத்துக்கள் நாச நடனம் புரிகின்ற விதத்தை இந்த ஓரங்க நாடகம் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.]

[இரவு சுமார் பத்துமணி. டாலர் பூமி என்றழைக்கப்படும் அமெரிக்காவின் தலைநகரமான வாஷிங்டன் நகரம். அங்கே கறுப்புக்காரியங்களைத் திரைமறைவில் நடத்தும் வெள்ளை மாளிகை (White House) யில், அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ட்ருமன், தன் அலுவலக அறையில் கம்பீரமாக வீற்றிருக்கிறுர். ராஜீய நிர்வாக மந்திரி (Secretary of State) டீன் அக்கிஸன் அவருக்கு எதிரேயுள்ள நாற்காலியில் வீற்றிருக்கிறுர். அவர் சுருட்டிலிருந்து சுருள் சுருளாக வெளியேறும் புகை அவர் ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறுர் என்பதைக் காட்டுகிறது.]

ட்ருமன்: மிஸ்டர். அக்கிஸன், நமது திட்டத்தைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? ஐக்ய நாடுகள் சபையில் பிரிட்டன் நம்மை ஆதரிக்காது என்றீர்களே, பார்த்தீர்களா இப்பொழுது...?

அக்கிஸன்: மிஸ்டர். அட்லியின் பேச்சு அப்படித்தானே இருந்தது. கம்யூனிஸ்ட் சீனுவின் இலட்சியங்களை அவர் அலசி அலசிக்காட்டி ஆதரித்ததைப் பார்த்தபோது, எங்கே காமன்வெல்த் நாடுகளைப் புது கோஷ்டியாக்கி, நம் வழியில் இடையூருக இருந்துவிடுவாரோ என்றல்லவா, பயந்தேன். நல்ல காலம், அவர் சொன்னது ஒன்று, செய்தது இன்னென்று.

ட்ருமன்: அதுதான் பெயர் போன பிரிட்டிஷ் ராஜதந்திரம். அதை நாம் எவ்வளவு சாதுர்யமாகப் பின்பற்றுகிறேமோ, அதைப் பொறுத்துத்தான் உலக அரங்கில் நம் வெற்றியும் தோல்வியும் முடிவாகும்.

அக்கிஸன்: ஆனலும் பாருங்கள், 'ஆசியா ஆசியருக்கே' என்ற ஆசை இன்னும் ஆசியரைவிட்டபாடில்லை. இந்தக் கூச்சலைக் கிளப்பிய ஜப்பானை, நமது இரண்டு அணுகுண்டுகள் அடக்கி விட்டன. இருந்தாலும் அந்த ஆசை ஆசியர் உள்ளத்தைவிட்டு அகலுவதாகக் காணும். நேரு இங்கு வந்தபொழுது அவருக்கு எவ்வளவு உபசாரம் செய்தோம். நம் பத்திரிகைகளெல்லாம் 'அரசியல் மேதை', 'சமாதானத் தூதுவன்' என்றெல்லாம் அவரைப் புகழவில்லையா? முடிவில், ஆசியாக்காரனை ஆதரித்து, நம்மை எதிர்த்துத்தானே அவர் பிரதிநிதி ஐ. நா. சபையில் ஓட் செய்திருக்கிறுர்.

**[பூ. சொ. கணேசன்]**

ட்ருமன்: அது மட்டுமா? அவரது அண்டைநாடு பர்மாவுமல்லவா அவர் வழியைப் பின்பற்றுகிறது.

அக்கிஸன்: ஜனதிபதி, ஆசியர்களைப் பட்டினி போட்டால்தான் அவர்கள் கொட்டம் அடங்கும் அதனல்தான், இந்தியா கேட்ட கோதுமையை அவர்களுக்கு அனுப்பக்கூடாது என்கிறேன்.

ட்ருமன்: மிஸ்டர் அக்கிஸன் நீங்கள் ஒரு விஷயத்தை மறந்துவிட்டீர்கள். பட்டினியும் பஞ்சமும் தான் கம்யூனிசத்தின் விளைநிலம். ஆசியாவைப் பட்டினி போடுவது நமக்குத்தான் ஆபத்து.

அக்கிஸன்: அபரிமிதமான உணவு அளித்து, ஆசியர்களைக் கொழுக்க வைப்பதுதான் பெரிய ஆபத்து.

ட்ருமன்: ஹூம், (பெருமூச்சு விடுகிறுர்). பலம் பொருந்திய வல்லரசாயிருப்பதே ஆபத்துதான், (மணி பத்தடிக்கிறது, ட்ருமன் சிறிது நேரம் மௌனமாயிருக்கிறுர். அக்கிஸன் புது சுருட்டொன்றைப் பற்ற வைக்கிறுர்.) ஐசன்ஹோவர் வரும் நேரமாகிவிட்டதே:

[பூட்ஸ் சப்தம் ஜெனரல் ஐஸன்ஹோவரின் வருகையை அறிவிக்கிறது. சில வினடிகளில் ஐஸன்ஹோவர், ட்ருமன் முன் காட்சியளித்து 'ஸல்யூட்' செய்கிறுர். ட்ருமனும், அக்கிஸனும் எழுந்து நின்று கைகுலுக்கி அவரை வரவேற்கிறுர்கள். மூவரும் அவரவர் ஆசனத்தில் அமர்கின்றனர்.]

ட்ருமன்: ஜெனரல் ஐஸன்ஹோவர், உங்கள் ஐரோப்பிய சுற்றுப்பிரயாணம் எப்படி? நல்ல வெற்றிதானே?

ஐஸன்ஹோவர்: வெற்றிதான் ...முழுவெற்றி......ஆனல்...

ட்ருமன்: ஆனல்...என்ன?

ஐஸன்ஹோவர்: அதுதான் பத்திரிகைகளில் படித்திருப்பீர்களே; எங்கு போனலும் ஒரே கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டம்; 'திரும்பிப் போ' என்ற கோஷம். எல்லாம் கம்யூனிஸ்ட் கலாட்டா.

அக்கிஸன்: (ஆவேசத்துடன்) அங்குள்ள சர்க்கார் இதையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டு பேசாமலா இருந்தார்கள்?

ஐஸன்ஹோவர்: மிஸ்டர் அக்கிஸன், ஆத்திரப்படுவதில் பயனில்லை. தாங்கள் விரும்பாத தலை

வர்களுக்கு, தங்கள் அதிருப்தியைக் காட்ட கறுப்புக் கொடி பிடிப்பது ஜனநாயக நாடுகளில் அளிக்கப்பட்டுள்ள உரிமை.

ட்ருமன்: ஜெனரல், ஜனநாயகத்தின் பேரால் மக்களுக்கு அதிகப்படியான உரிமைகளை வழங்குவதும் ஆபத்தானது.

ஐஸன்ஹோவர்: அதனுல்தான், அங்கங்கேயுள்ள நாடுகளெல்லாம், எனக்கு எதிராகச்செய்த ஆர்ப்பாட்டங்களைத் தடைசெய்துவிட்டன. இருந்தும் என்ன? கறுப்புக்கொடிக்காரர்கள் துப்பாக்கிக் குண்டுகளைத் துச்சமாக மதிக்கும் அளவுக்கு அந்தநாடுகளில் வளர்ந்துவிட்டார்கள.

அக்கீஸன்: அவர்கள் சிறுகூட்டம், கூச்சல்போடும் கோஷ்டியென்றல்லவா எண்ணினேம்.

ஐஸன்ஹோவர்: அவர்கள் சிறு கோஷ்டியல்ல, மலைபோல் வளர்ந்துவிட்டார்கள். நான்போன இடங்களிலெல்லாம் கம்யூனிஸம் தாண்டவமாடுகிறது.

ட்ருமன்: மார்ஷல் உதவிபெற்ற நாடுகளின் நிலை என்ன?

ஐஸன்ஹோவர்: மார்ஷல் திட்டப்படி உதவிபெற்ற நாடுகளெல்லாம், நம் தர்மசிந்தனையைப் பாராட்டுவதற்குப் பதிலாக, நம் தற்காப்புக்காகத்தான் இவற்றையெல்லாம் செய்கிறோம் என்றல்லவா நினைக்கின்றன.

ட்ருமன்: உண்மையும் அதுதானே......!

அக்கீஸன்: ஜனுதிபதி அவர்கள் நினைப்பது தவறு; நம் பாதுகாப்பில்தானே அவர்கள் வாழ்க்கை மலர முடியும்?

ட்ருமன்: ஜெனரல், அதுகிடக்கட்டும், நம் பாதுகாப்பு வேலை எப்படி?

ஐஸன்ஹோவர்: பாதுகாப்பெல்லாம் பலம்தான்; ஆனுல் பாருங்கள். பல ஆண்டுகளுக்குமுன் நம் விமானங்கள் ஜெர்மனிமீது குண்டுவீசி நாசவேலை செய்ததை ஜெர்மானியர்கள் இன்னும் மறக்கவில்லை. பெர்லின்மீது நாம் குண்டுவீசிய நாளை இன்னும் 'பழிவாங்கும் நாள' என்று அவர்கள் கொண்டாடி வருகிறார்கள்.

ட்ருமன்: அப்படியானல் அவர்களிடம் ஆயுதங்களை ஒப்படைக்க யோசிக்கிறோமே, அதுவும் ஆபத்தானதுதானு?

ஐஸன்ஹோவர்: ஆம் திர யோசித்து, நிதானமாகச் செய்யவேண்டியவேலை.

அக்கீஸன்: ஹிட்லர் சகாக்கள், ஜெர்மன் மக்களிடம் நமக்கெதிராக வளர்த்துவிட்டிருக்கும் வெறுப்புத்தான் மூன்றுதலை முறைகளுக்குத் தாங்குமே; அதே முறையைத்தான், கம்யூனிஸ்ட் சீனுவும் இப்பொழுது பின்பற்றுகிறது. புது வருடத்தை அவர்கள் எப்படிக் கொண்டாடி இருக்கிறார்கள் தெரியுமா? அமெரிக்க ஜனுதிபதியின் உருவச்சிலைசெய்து அதைப்பொது இடங்களில் நிறுத்தி, துப்பாக்கிக் குண்டுகளால் அதைத் துளைத்து. புத்தாண்டுக் கொண்டாட்டம் நடைபெற்றிருக்கிறது. ஜனுதிபதி, இதில் அமெரிக்காவை மட்டும் அவர்கள் கேவலப்படுத்தவில்லை. ஜனநாயக உலகத்தையே கேவலப்படுத்தியிருக்கிறார்கள்.

(இதைக் கேட்டதும் ட்ருமன் கண்கள் அனலைக் கக்குகின்றன).

[திடீரென்று வெள்ளை மாளிகையின் விளக்குகள் அணைகின்றன. எங்கும் இருள் சூழ்கிறது. ட்ருமன், அக்கீஸன், ஐஸன்ஹோவர்—மூவரும் ஒன்றும்புரியாமல் 'திக்பிரமை' பிடித்தவர்கள்போல் உட்கார்ந்திருக்கின்றனர். இருளின் மத்தியில் பிரகாசம் தோன்றுகிறது. அந்த ஒளியில் மூவருக்கும் அறிமுகமான இரண்டு உருவங்கள் தென்படுகின்றன. மீண்டும் விளக்குகள் எரிய ஆரம்பிக்கின்றன.

ட்ருமன்: யாரது......?

முதல் உருவம்: மிஸ்டர் ட்ருமன், என்னைத் தெரியவில்லையா? அமெரிக்காவின் தந்தை யென்று நீங்கள் போற்றும் வாஷிங்டன் நான்தான். இந்த உயரமான மனிதர் யார் தெரியுமா? இவர்தான் அடிமை விலங்கொடித்த ஆபிரகாம் லிங்கன்.

[ட்ருமன், அக்கீஸன், ஐஸன்ஹோவர் மூவரும் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்க்கின்றனர். சிறிது நேரத்தில் மூவரும் தெளிவடைந்து ஒவ்வொருவராக, வந்த இருவரையும் கைகுலுக்கி வரவேற்கின்றனர். பிறகு எல்லோரும் அமர்கின்றனர்]

ட்ருமன்: (ஆச்சரியத்துடன்) இதுவரை நாங்கள் பேசியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தீர்களா?

வாஷிங்டன், ஆபிரகாம்லிங்கன் இருவரும்: அதனுல்தான் இங்கே இப்பொழுது தோன்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

அக்கீஸன்: நல்ல சமயத்தில் வந்தீர்கள், அமெரிக்கா அரசியல் பாதையில் அதி முக்கியமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டிய நேரத்தில் வந்ததற்காக மிகவும் மகிழ்ச்சி.

வாஷிங்டன்: நண்பர்களே, இந்த நாட்டின் வருங்காலக் கொள்கைகளை நிர்ணயிக்கப்போகும் உங்களுக்கு, இந்நாட்டைப் பற்றிய கடந்தகால உண்மைகள் சிலவற்றைத் தெரிவிக்க இங்கு வந்திருக்கிறோம். அவற்றைக் கேட்டபிறகு நீங்கள் உங்கள் முடிவுகளைச் செய்துகொள்ளலாம். சுதந்திரத்தின் பிறப்பிடம் அமெரிக்கா. அந்த சுதந்திரத்துக்காகத்தான், நம் உற்றார் உறவினருடன் (பிரிட்டிஷாருடன்) போராடி, நாம் தனித்தாயகமானேம். நம் சுதந்தரத்தை நாம் கண்ணிமையெனக் காக்கிறோம். பிறர் சுதந்தர உணர்ச்சியையும் நாம் அதேபோல் கௌரவிக்க வேண்டியது அவசியமல்லவா?

ட்ருமன்: (இடைமறித்து) பிறர் சுதந்தரத்தைக் கௌரவிக்கத்தானே கோடிக் கணக்கான டாலரை அந்நிய நாடுகளிலே கொட்டுகிறோம்.

வாஷிங்டன்: இல்லை, டாலர் கொடுத்து அந்நிய நாடுகளின் சுதந்தரத்தை விலைக்கு வாங்குகிறோம்.

ட்ருமன்: கொரியாவின் சுதந்தரத்தைக் காக்க நாம் செய்யும் தியாகம் நீங்கள் அறியாததா?

ஆபிரகாம்லிங்கன்: (இடைமறித்து) மிஸ்டர் ட்ருமன், அமெரிக்க ஐக்யத்துக்காக நான் என் உயிரைத் தியாகம் செய்தேன். ஆனுல், என் உயிர்த்தியாகத்தால் வளர்ந்து உருவாகிய அமெரிக்கா, இன்று கொரிய ஐக்யத்தைக் குலைத்துக் கொண்டிருக்கிறது.

ட்ருமன்: இது தவருன குற்றச்சாட்டு; கொரிய ஐக்யமதான் அமெரிக்காவின் இலட்சியம்.

வாஷிங்டன்: கொரியாவில் பிரமாதமாக என்ன சாதித்துவிட்டோம். இன்பம் கொழித்த கொரியாவை, நமது படைகளும் தளவாடங்களும் சாம்பல் காடாக்கியிருக்கின்றன.



அக்கீஸன்: அது கம்யூனிஸ்ட் சீனு செய்த துரோகச் செயலின் விளைவு. நம்மை முதுகுப்புறமாகத் தாக்க யத்தனித்த அவர்களை ஒழிக்க நாம் வீசிய குண்டுகள், கொரியாவைப் பொசுக்கிவிட்டன.

ஆபிரகாம்லிங்கன்: சீனர்கள் துரோகிகளல்ல, பாட்ஸ்டம் மாநாட்டுத் தீர்மானப்படி பார்மோஸாவை சீனக் கம்யூனிஸ்டுகளிடம் ஒப்படைக்காதது, நமது துரோகச் செயல் அல்லாமல் வேறென்ன?

ஐஸன்ஹோவர்: பார்மோஸா சீனரிடம்தானே இருக்கிறது?

வாஷிங்டன்: யார் அந்த சீனர்கள்.

ஐஸன்ஹோவர்: சீன தேசிய சர்க்காரின் தலைவர் சியாங்.

லிங்கன், வாஷிங்டன் (இருவரும்) ஆஹா...ஹா (விழுந்து விழுந்து சிரிக்கின்றனர். ட்ருமன், அக்கீஸன், ஐஸன்ஹோவர் — மூவருடைய முகத்திலும் அசடு வழிகிறது.)

வாஷிங்டன்: மிஸ்டர் ட்ருமன், உண்மையை மறைத்துப் பயனில்லை. சியாங் ஒரு மாஜித்தலைவர்' சீனுவின் பெரும் பகுதி மக்களால் வெறுக்கப்பட்டவர். அவர் அமெரிக்காவின் கையாளாக (puppet) இருக்க முடியுமே தவிர, சீனமக்களின் தலைவராக முடியாது. சீனர்களால் ஏகோபித்துத் தலைவராக ஒப்புக்கொள்ளப்பட்டவர் மாஸே-துங் ஒருவர்தான். சீன மக்களின் தலைவராக சியாங் இருக்கவேண்டும் என்பது உங்கள் விருப்பம். இந்த எண்ணம் அமெரிக்க நாடு தோன்றிய இலட்சியங்களுக்கே முரண்பட்டது; பிறர் சுதந்தரத்தைப் பறிப்பது.

ட்ருமன்: மிஸ்டர் வாஷிங்டன், உங்கள் அரசியல் 18-ம் நூற்றுண்டுக்குப் பொருத்தமானது. இது அணுகுண்டு சகாப்தம்!

வாஷிங்டன்: மிஸ்டர் ட்ருமன். அணுகுண்டைவிடப் பலம் பொருந்தியது மக்களின் விடுதலை வேட்கை. பிரிட்டன் 1776-ல் அணுகுண்டைக் கண்டுபிடித்திருந்தால், அப்பொழுது நாம் நடத்திய சுதந்தரப் போரை அடக்கியிருக்கும் என்று நம்புகிறீர்களா? பெற்றோர்களை எதிர்த்துப் பிள்ளைகள் அன்று நடத்திய போராட்டம், மகன் தந்தைக்கு அடிமையல்ல' என்பதை நிரூபிக்கத்தானே?

லிங்கன்: மிஸ்டர் ட்ருமன், இன்னுமொன்று கூற விரும்புகிறேன். என் உயிர்ப்பலி, எப்படி அமெரிக்கரை ஒன்றுக்கியதோ, அதேபோல் கொரியர்கள் உயிர்ப்பலி, கொரியாவை ஒன்றுபடுத்துவது மட்டுமல்ல! அமெரிக்க ஆதிபத்யத்தையே இவ்வுலகிலிருந்து நிரந்தரமாக அழித்துவிடும்.

ட்ருமன்: மிஸ்டர் லிங்கன், நீவிர் காலத்தால் வேறுபட்டவர்கள். கருத்தும் வேறுபடுகிறது. ஆனுல், ட்ருமன் கொள்கையை உலகத்தின் பெரும்பான்மையான நாடுகள் ஆதரிக்கின்றன—நாற்பதுக்குமேற்பட்ட நாடுகள் ட்ருமன் கூடாரத்தில்.

லிங்கன்: அரசியலிலே ஆருடம் கணிப்பது தவறு. அதிலும் புள்ளிவிவரத்தை வைத்துக்கொண்டு பொம்மலாட்டமாடுவது மிக மிகத் தவறு. ஐ.நா. சபையிலே அமெரிக்கத் தீர்மானத்தை எதிர்த்த ஏழு நாடுகளையும், நடுநிலைமை வகித்த நாடுகளையும் சேர்த்து மொத்த ஜனத்தொகையைக் கணக்கிட்டால், உலக மக்களில் பாதிக்கு மேல், அமெரிக்காவை எதிர்க்கிறார்கள் என்று ஆகிறது. அதை மறந்துவிடவேண்டாம்.

வாஷிங்டன்: உலகத்தில் ஐந்தில் ஒரு பங்கு மக்களைக்கொண்டு விளங்கும் சீன நாட்டுக்குப்பிரதிநிதித்வம் அளிக்காத சபை, உலகசபையாக முடியாது. அதன் முடிவுகள், எந்த நாட்டையும் கட்டுப்படுத்தாது.

லிங்கன்: மேலும், அமெரிக்க உள்நாட்டுப் போர் நடந்த காலத்தில், அதில் உயிர்நீத்த தியாகிகளின் நினைவு விழாவிலே, கெட்டிஸ்பார்க நகரத்திலே நான் பேசிய பேச்சின் சாரமாவது: 'நம் நாடு சுதந்தரத்திலே பிறந்தது...உலகில் படைக்கப்பட்ட எல்லோரும் சம அந்தஸ்து உடையவர்கள் என்ற தத்துவத்தைநிலைபடுத்த அமெரிக்கா தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ளது.........இதற்காக உயிர்விட்ட வீரர்களின் தியாகம் வீணுகாமல் பாதுகாப்பது நமது கடமை......' மிஸ்டர் ட்ருமன், இது என்னுடைய கனவுமட்டுமல்ல; அன்று வாழ்ந்த அத்தனை அமெரிக்கரின் ஒன்றுபட்ட ஆசை. சுதந்தரத்தைக் காக்கப் பிறந்த அமெரிக்கா, ஏகாதிபத்யச்சூருவளியாகவாமாறவேண்டும்.

ஐஸன் ஹோவர்: நீங்கள் துவக்கிய பணியைநிறைவேற்றத்தானே, ஆங்காங்கே அமெரிக்கப் பெரும் படை போர்க்கோலம் பூண்டு அணிவகுத்து நின்றது...!

வாஷிங்டன்: ஆயுதம் அமைதியை நிலைநாட்டாது, ஜெனரல்! ஐ.நா. சபை அமெரிக்கரின் ஏவலாளியாக இருக்கும் நிலை மாற வேண்டும். ஒவ்வொரு நாட்டின் உண்மைப் பிரதிநிதியும் அதில் இடம் பெறவேண்டும்..... ........ மிஸ்டர் ட்ருமன், நீங்கள் நினைப்பது போல் ஜனநாயகமும், கம்யூனிசமும் முரண்பட்ட சக்திகளல்ல, ஜனநாயகம் கம்யூனிசத்தில்தான் முழுமையை அடையமுடியும், கம்யூனிஸத்தின் ஆரம்பமேஜனநாயகம் தான். இவையிரண்டும முரண்பட்டவை என்பது முதலாளித்துவ ஏகாதிபத்திய வாதிகளின் சூழ்ச்சி.

ட்ருமன்: மிஸ்டர் வாஷிங்டன்; மிஸ்டர் லிங்கன், இருபதாம நூற்றுண்டின் அரசியல் பித்தலாட்டங்கள் உங்களுக்குத்தெரியாது. மிஸ்டர் வாஷிங்டன், உங்கள் கடமை அமெரிக்க நாட்டைத் தோற்றுவித்தது. மிஸ்டர் லிங்கன், உங்கள் கடமை, அதை ஐக்யப்படுத்தியது. உங்கள் வேலை முடிந்துவிட்டது, என் கடமைஎன்னஎன்பது எனக்கும் என் சகாக்களுக்கும் நன்ருகத் தெரியும்.

லிங்கன்: (ஆவேசமாக) உன்மை அமெரிக்க நாட்டை அழிப்பது. மிஸ்டர் ட்ருமன், அதைத் தாராளமாகச் செய்யுங்கள்...... நாங்கள் வருகிறோம்.

வாஷிங்டன்: மிஸ்டர் ட்ருமன், அமெரிக்கா அழிவுப் பாதையில் செல்லுகிறது; அதை அறிவிக்கத்தான் வந்தோம். எங்கள் கடமை முடிந்தது. வருகிறோம்.

[மீண்டும் விளக்குகள் அணைகின்றன. இருளிலே ஒளி தோன்றுகிறது. ஒளியிலே இரண்டு உருவங்களும் ஒன்றிக் கலக்கின்றன. மீண்டும் விளக்குகள் எரிகின்றன. அவர்கள் உட்கார்ந்திருந்த நாற்காலிகள், காலியாகக் காட்சியளிக்கின்றன: "கடமையாம் கடமை! பைத்தியக்காரர்கள்" என்று சொல்லி ட்ருமன் உரத்துச் சிரிக்கிறார். அக்கீஸனும், ஐஸன் ஹோவரும் ஒருவரையொருவர் பார்த்து விழிக்கின்னர்.] திரை விழுகிறது!

(3-ம் பக்கம் தொடர்ச்சி)

புகழ்ந்துகொண்டு தானிருக்கிறது.

அன்று பாரதியார் பாடினர் உழைக்காதவன் 'உலுத்தன்' என்று! அதே பாரதியார் இன்று உழைக்காமலேயே நெற்றி வியர்வை நிலத்தில் சிந்தாமலேயே—கஷ்டம் 'இன்னதென்று, அறியாமலேயே — உலுத்தர்களாக யிருந்து கொண்டே, உண்டு 'கொழுத்து' உப்பரிகையில் உலவும் 'உல்லாசிகளை'க் கண்டால், என்னவென்று பாடுவாரோ? எப்படி நெஞ்சுக் கொதிப்புடன் 'அனலை'க் கக்கியிருப்பாரோ!

* * *

கதையின் ஆரம்பத்தில் வந்து ரூபாய் கேட்டு-அய்யரிடம் அல்லல் பட்ட அதே ஏழைத் தோழன் சுந்தரத்தை இப்பொழுது பார்க்கின்றோம்.

ஓட்டைக் குடிசை! இடிக்கு 'அலறும்' சுவர்கள்! கஞ்சிக்காக, 'அண்ணா, அண்ணா' என்று ஒரு ஜீவன் கதறும் பரிதாபக் காட்சி! இதுதான் அந்த ஏழைக் குடிசையின் படப்படிப்பு!

சுந்தரம் தள்ளாடிக் கொண்டே தன் குடிசையினுள் நுழைந்தான். அங்கு ஓர் மூலையில் அவன் சிறிய—ஆசைத் தம்பி தரையில் சுருண்டு படுத்துக் கொண்டிருந்தான். அவனை மெள்ள எழுப்பி தன் மடியின் மீது சாய்த்துக் கொண்டான் சுந்தரம்.

அண்ணன் தலையில் இரத்தம் கசிவதைக்கண்ட, அந்தச் சிறுவன் பசியின் கொடுமையினால், பேசவும் சக்தியில்லாமல்—அழவும் உணர்ச்சியில்லாமல் துடிதுடித்தான்.

தன் தம்பியின் முகக்குறிப்பையுணர்ந்த சுந்தரம் 'கண்ணே ....இன்று காலையில் பண்ணை அய்யரிடம் ஐந்து ரூபாய் கடன் கேட்டேன். அந்தக் குற்றத்திற்காகத் தடியால் என் தலையில் அடித்தார்! அப்பொழுது ஏற்பட்ட 'ரணகாயம்'தான் இது" என்று முணு முணுத்தான்.

சுந்தரம் தன் தம்பியின் முகத்தையே உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தான். அவன் வாய் பேசாவிட்டாலும், கண்கள் பேசின.

தம்பி...உன்னை என் கண்கள் போல இவ்வளவு நாள் பாதுகாத்து வந்தேன்; நான் உண்ணாமலும் உன் பசியை ஆற்றிவந்தேன்; நீ 'பசி' என்று கதறுவதைப் பார்க்கச் சகிக்காமல், என்உடல்நலம் குன்றியிருந்தசமயமெல்லாம்கூட அதைப்பொருட்படுத்தாமல் உழைத்து உன் பசியைப் போக்கிவந்தேன்; நீ பசி மறந்து,'அண்ணா'வென்று ஆசை பொங்க அழைப்பதையே என் ஆனந்த உணவாக மதித்து வந்தேன். ஆனால்..........!

இன்று நீ, பசி, பசி யென்று பரதவிக்க — 'சவம்' போல் துவண்டுகிடக்க—பரிதாபமாய்க் காட்சியளிக்க—நான் என்ன செய்வதென்றே புரியாமல், விழிக்கின்றேன்; தவிக்கின்றேன்; நினைக்கின்றேன்; இரத்தக் கண்ணீர் வடிக்கின்றேன்!

தாய்—தந்தையற்ற அனாதைகள் நாம்! இந்தப் பரந்த உலகில் ஆதரவற்ற நிலைமையிலிருக்கிறோம்!

தம்பி!

இன்று சமூகமும், உலகமும் பணக்காரர்களின் கைப்'பொம்மை'களாகயிருக்கிறன! ஆம்! உலகமே ஏழைகளின்எதிரி! சமூகமே பாட்டாளிகளின் எமன்! இந் நிலையில் ஏழைகள் இப்பாழும் உலகில் எப்படி உயிர் வாழமுடியும்?

இந்நாட்டில்பசிக்கிறதே என்று கதறினால் — பரிதவித்தால் — இந்த அறிவு துலங்காத சமூகம், 'ஆண்டவனை'க்காட்டி எல்லாம் அவன் 'செயல்' என்று நகைக்கிறது! உண்ண உணவில்லை; உடுக்க உடையில்லை; படுக்கப் பாயில்லை; நிற்கநிழலில்லை; என்று கதறி ஆதரவு கேட்டால், இந்த நாசகார சமூகம் 'விதி'யைக்காட்டி 'எல்லாம் அதன்படிதான் நடக்கும்' என்று மதியற்றுக் கதறுகிறது! என்ன அறிவீனம்!

பாரதி பாடினன் வான்புகழ் கொண்ட தமிழ் நாடாம் இது! நீர்வளம்—நிலவளம் — இயற்கைவளம் படைத்த வண்டமிழ் நாடாம் இது! இமயத்தில் புலிக்கொடி நாட்டிய இமயவரம்பன் வாழ்ந்த இன்ப நாடாம் இது! வீரத் தமிழர்கள் வாழ்ந்த மறக்குடி நாடாம் இது! அன்னியர் வியக்கும செல்வ நாடாம் இது! கடலில் முத்தும்—தரையில் தங்கமும்—நிலத்தில் நிலக்கரியும்—காட்டில் சந்தனமும்—மற்றும் பல இயற்கை வளமும் மிக்க இன்ப நாடாம் இது! இந்நாட்டை 'முல்லைக்காடு—மணக்கும் நாடு!' என்று நமது புரட்சிக்கனல் பாரதி தாசனும் பாடியிருக்கிறார்.

அந்த நாடு இன்று எப்படி உருக்குலைந்து போயிருக்கிறது தெரியுமா? எப்படி அழிந்து கெட்டுக் கிடக்கிறது தெரியுமா? எப்படி எப்படி அழிந்து வருகிறது தெரியுமா? தாங்கும் இதயமிருந்தால் கேள்:

உழைப்பாளிகள் உருக்குலைய—பாட்டாளிகள் பரதவிக்க—பசி—பட்டினியால் மக்கள் மடிய—பாலுக்குப் பச்சிளங்குழந்தைகள் கதறிக் கண்ணீருகுக்க—வாழப் பிறந்த மக்கள் சொந்த நாட்டை விட்டு அயல் நாடுகளுக்குச்சென்று 'நாய்'களாகத் திரிய—இங்கு 'குப்பையர்'கள் கூட்டம் கொழுக்க—பணக்கார 'முதலை'கள் ஏழைகளின் இரத்த ஆற்றில் நீந்த—வடவர்

கள் நாட்டில் சுரண்ட—'பாலை வன'மாகிவிட்டது இத் தமிழ் நாடு! இன்ப நாடு இன்று துன்பக் காடாகிவிட்டது!

தம்பி.......

தமிழ் நாட்டின் துன்பக் கதையைக் கேட்கக் கொதிக்கிறதா, உன் இரத்தம்? ஆம்; கொதிக்கும்; மானமுள்ள தமிழன் ஒவ்வொருவனும், இன்றைய நிலைமையைச் சீர்தூக்கிப் பார்த்தால் அவன் இரத்தம் கொதிக்கும்! நெஞ்சம் குமுறும்; வேதனைப் புயல் வீசும்!

இந்தத் துன்பக் கதையைப் பாருக்கு எடுத்துரைக்க அதோ, கேட்கிறது பார்; ஓர் புனித இயக்கத்தின் குரல்! அறைகூவி அழைக்கிறார்கள் பார் அந்தத் தமிழ்ச் சிங்க ஏறுகள்!

தம்பி!

அந்தத் தமிழ் வீரர்கள், உண்மையை உணர்த்தி—தமிழ் நாடு—தமிழ்மொழி தழைக்கப் போர்புரியும் அந்த மறக்குடி மக்கள், இன்று 'ஆட்சியாளர்'களால், 'கருங்காலிகள்' என்று தூற்றப்படுகின்றனர்! 'துரோகிகள்' என்று தூஷிக்கப்படுகின்றனர்! 'தடியடி' தர்பாருக்கு ஆளாக்கப்படுகின்றனர்! காராக்கிரகத்தில் தள்ளப்படுகின்றனர்!! சிற்றெறும்புகளாக நசுக்கப்படுகின்றனர்!!!

இது நன்றிகெட்ட தமிழ் நாடு! பதவிப் பித்தர்கள்—கொள்ளை லாபக்காரர்கள்—உழைப்பவன் உதிரத்தை உறிஞ்சும் பேயர்கள் வாழும் நாடு! அமைச்சர்களிலிருந்து தொண்டர்கள் வரை 'பதவி'க்குப் போட்டியிட்டு — மக்கள் நலத்தையும் — நாட்டின் நலத்தையும் மறந்து—தமது வாழ்வை 'விழா'வாக்கிக்கொண்டு — லலிதாக்களின் நாட்டியங்களிலும்—பாகவதர்களின் பாட்டுக்கச்சேரிகளிலும்—'ஸ்ரீகிருஷ்ணா லாட்ஜ்' திறப்புவிழாக்களிலும்—உயர்ந்த தவிருந்துச் சாலைகளிலும் — 'ஹனுமானில்' டெல்லிவரை பறந்து 'காற்று' வாங்கிக்கொண்டிருப்பதிலும் பங்கெடுத்துக் கொண்டு—நாட்டைக் குட்டிச் சுவராக்கி—மக்களை பசி—பட்டினியால் வாட்டி—'ஏன்?' என்று கேட்போரின் மண்டையை உடைத்து — 'ராமராச்சிய'மென்ற பேரால் 'ஜார்' ஆட்சி நடத்தும் நாடு! வளமிக்க வண்டமிழ் நாடு—இன்று அவர்களின் வேட்டைக்காடு!

தம்பி!

இந்த நன்றிகெட்ட தமிழ் நாட்டில் நம்மைப்போன்ற ஏழைகள்—பாட்டாளிகள் வாழ இடமில்லையடா! இந்த மானங்கெட்ட தமிழ் நாட்டில் உழைப்பாளிகள் உரிமையுடன் வாழ வகையில்லையடா! இந்த சுயநலத் தமிழ் நாட்டில், நெற்றி வியர்வை நிலத்தில் சிந்தி—பாடுபடும் பாட்டாளிக்குப் பிழைக்க வழியில்லையடா........!"

சுந்தரத்தின் கண்கள் இந்தப் பரிதாபத்தைதான் பேசியிருக்க வேண்டும்! அவன் கண்களில் 'இரத்தக்கண்ணீர்' வழிந்து கொண்டிருந்தது.

"அண்ணா...பசி....க்குது..... ஐயோ....என் உயிரே பிரிந்திடும் போலிருக்குது, அண்ணா......"

இது அண்ணனின் மடியில் பசியுடன் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த அந்தச் சிறுவனின் துடி துடிப்பு!

தன் ஆருயிர்த் தம்பி—அருமைத் தம்பி—ஓரே ஆசைத்தம்பியின் துடி துடிப்பைக் காணமுடியாத சுந்தரம், 'கண்ணே, கொஞ்சம் பொறுடா, இதோ வந்து விடுகிறேன்' என்று தன் தம்பியிடம் கூறிவிட்டு, அக்கம்—பக்கத்திலுள்ள குடிசைகளில் நுழைந்து, தன் தம்பி பசியால் உயிருடன் மன்றாடுவதைக் கூறி—கொஞ்சம் 'கஞ்சி'த்தண்ணீராவது கொடுங்கள் என்று கதறினான்.

"நாங்களே ஒருநாள் பட்டினி! இரண்டு நாள் பட்டினி! கஞ்சித் தண்ணீக்கூடயில்லே..."

இப்படிக் கூறின அந்தக் கூரையில் வாழும் பாட்டாளிகளின் கண்கள்! ஏதோ முடிவுக்கு வந்த சுந்தரம்—குப்பையர் வீட்டிற்குப் பறந்தான்.

"சாமி! சாமி!"

அப்பொழுது இரவு எட்டு மணியிருக்கும். தட, தட வென்று, தாளிட்டிருந்த கதவைத் தட்டினன், சுந்தரம்.

கதவு திறக்கப்பட்டது! அய்யரால் அல்ல; அவரது இளமனைவி பங்கஜத்தால்!

"அம்மா...அய்யர் இல்லிங்களா......?"

ஏமாற்றத்துடன் ஒலித்தது, சுந்தரத்தின் குரல்!

"ஏன், என்ன வேண்டும்?"

அந்த வாலிபன்மீது ஒரு 'திருஷ்டி' வீசி இப்படி கேட்டாள், அந்த அக்கிரகாரவாசி!

"அம்மா...என் அருமை தம்பி...பசியாலே துடிக்கிறான் ...ஒரு கால்படி அரிசிக்குடுத்தா, உங்களுக்கு ரொம்ப புண்ணியம் உண்டாகும்..."

அவன் கூக்குரல் அவள் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை அவள் அவன் திரண்ட தோள்களையும்—பரந்த மார்பையும்—வசீகர உடலையும் 'ரஸித்து'க்கொண்டிருந்தாள்! அமைதியான முறையில் அல்ல; மாளாத 'பசி'யின் வேகத்தால்!

"அம்மா...?"

இதுசுந்தரத்தின் வழக்கமான பழய பல்லவி!

"சரி; உள்ளேவா?"

அவள் கூப்பிட்டாள்!

'தகாது தாயே..." என்றான் அவன்!

"அட, 'சும்மா'வா!"

இப்படி அவள் 'கண்கள்' அழைத்தன.

உள்ளே அழைத்துச்செல்லப் பட்ட சுந்தரம்—அந்த 'ஜாலக் காரி'யின் 'செயலை'க்கண்டு திடுக் கிட்டான்!

அந்த சொகுசுக்காரி—அக்கிர காரவாசி — உடற்'தாகம்' கொண்ட ராட்சசி—சுந்தரத் தின் கரங்களில் சில 'பச்சை நோட்டு'களைத் திணித்து 'பஞ் சணை'க்கழைத்தாள்!

அவன் மறுத்தான் அத்தக் காமப்பேயின் 'பசி'யைத் தீர்க்க!

இந்த நெருக்கடியான கட்டத் தில் கதவு 'தட, தட'வென்று தட்டப்பட்டது! வேறுவழி யின்றி கதவும் திறக்கப்பட்டது!

உள்ளே நுழைந்த 'கிழ' குப் பையர் கண்டார், பஞ்சை சுந்த ரத்தின் கரங்களில் 'பச்சை நோட்டு'கள் கசங்கிக் கிடப் பதை! அலறினர்; கதறினர்; ஓல மிட்டார்; அங்குப் பெரிய கூட் டத்தையும் சேர்த்துவிட்டார்!

அதன் எதிரொலியாக இதோ, நிரபராதிசுந்தரம், குற்ற வாளிக் கூண்டில் நின்றுகொண் டிருக்கிறான், நீதிமன்றத்தில்!

"அய்யர் இல்லாத சமயம் வீட்டில் நுழைந்து - பணத்தைக் களவாடி—அவர் மனைவி பங்க ஜம்மாளின் 'கற்பை'யும் கெடுக்க முயற்சித்த குற்றத்திற்காக — குற்றவாளிக்கு — ஒரு வருட 'கடுங்காவல்' தண்டனை விதிக்கி றேன்!"

இது நீதிபதி கனம் 'ராஜ கோபாலய்யரின்' தீர்ப்பு!

சுந்தரம் வெஞ்சிறையில் 'வஞ்சகர்'களால் தள்ளப்பட் டான். நிரபராதிகளைத்தான் இன்றைய உலகம், குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி—காராக்கிர கத்தில் தள்ளுகிறது! என்ன உலகம்! என்ன சமூகம்!! என்ன நீதி!!!

ஏழை சுந்தரத்தின் கண்களில் கண்ணீர்—ஆம்; 'இரத்தக் கண் ணீர்' சொரிந்துகொண்டிருந் தது. அவன் உள்ளம் எரிமலை போல் குமுறிக்கொண்டிருந்தது. திக்கற்ற நிலைமையில்—நிர்க்கதி யாக—பசிக்குஉயிருடன் மன்று டிக்கொண்டிருந்ததன் அருமைத் தம்பி அந்தக் குடிசையில் என்ன ஆனானோ...? இதை நினைக்க, நினைக்க சுந்தரத்தின் இதயம் வெடித்துக்கொண்டிருந்தது. சந்தேகமில்லை; அவன் 'பிண மாக' சிறையில் சாய்ந்தான்....

'ஏது ஏழைக்கு இன்பம்...?' என்ற குரல் எங்கிருந்தோ, மெல்ல காற்றில் தவழ்ந்து ஒலித் துக்கொண்டிருந்தது.......

—

தஞ்சைமாவட்ட

## திராவிட முன்னேற்றக் கழக

## முதல் மாநாடு

**மாயவரம்.**

இடம்: கூறை நாடு C. நடராசன் பந்தல்

**1951 மார்ச் 3, 4 சனி ஞாயிறு நாளில்**

தலைவர்:

**சென்னை தோழர் N. ஜீவரெத்தினம்**

(கார்ப்பொரேஷன் கவுன்சிலர்)

துவக்குபவர்:

**தோழர் காஞ்சி கலியாணசுந்தரம்**

மாநாட்டில் கழகப் பொதுச்செயலாளர் அறிஞர்

**C. N. அண்ணாத்துரை M. A. அவர்களும்**

கழக முன்னணி வீரர்களும் கலந்துகொள்வர்

மாநாட்டில் கலந்துகொள்ளும் இசைவாணர்கள்:

**நாகூர் தோழர் அனீபா**

**மாயவரம் தோழர் ராமசாமி**

நடிப்புப் புலவர்: **K. R. ராமசாமி**

பொதுச்செயலாளர்: **C. N. அண்ணாத்துரை**

பங்கேற்று நடிக்கும் நாடகங்கள்,

**"சந்திரமோகன்" "நீதிதேவன் மயக்கம்"**

சனி இரவு ஞாயிறு இரவு

செயலாளர்:

**V. பராங்குசம்**

**R. பழனிச்சாமி**

தொண்டர்படைத் தலைவர்:

**R. முத்துக்குமாரசாமி**

**R. ஜோசப்**

வரவேற்புக்குழு தலைவர்:

**K. K. நீலமேகம்**

விளம்பர உறுப்பினர்:

**வை. மாணிக்கம்**

பெண்களுக்குத் தனி இடமுண்டு.

Edited, Printed and Published bY P. C. Manickavachagam alias Kanchi Manimoliyars [illegible] Printers 147, C[illegible]al Merchant St., Madras. Joint Editor. M. Ilancheliyan B. A.(Hon)

